# வளம் தரும்
# ஸ்ரீ வடசபரி ஐயப்பன்

தொகுப்பாசிரியர்

**கலைமாமணி ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன்**

வெளியீடு

**ராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீ ஐயப்பசாமி ஆலயம் டிரஸ்ட்**

சென்னை 600 028

**VALAM THARUM SRI VADASABARI IYYAPPAN**
(In Tamil)



Published by
**Raja Annamalaipuram**
**Sri Iyyappaswamy Temple Trust**
Chennai 600 028
On the occasion of its
Kumbabhishekam on 7.5.2008


PRINTED BY RAVI RAJA OFFSET

Compiled by
Kalaimamani Ervadi S. Rathakrishnan

# வளம் தரும்
# ஸ்ரீ வடசபரி ஐயப்பன்

## இந்து மதம்

தோன்றிய காலம் தெரியாத தொன்மையான மதம் இந்து மதம். என்று என்றோ, எவரால் என்றோ எவரும் கூறவியலாத எண்ணற்ற ஆண்டுகளுக்கு முந்திய மூத்த மதம் இந்த மதம். இந்து மதம் என்று இதற்குப் பெயர் சூட்டுவதற்கு முன்பே 'ஸநாதன தர்மம்' என்ற பெயரில்தான் அப்போது வாழ்ந்த மக்கள் வழிதொடர்ந்த பாதையாக இது இருந்திருக்கிறது. பிரிவுபடாத பாரத நாட்டில் சிந்துநதி பாய்ந்து வந்தது. சிந்துநதி பாயும் நாட்டில் வாழ்ந்தவர்தம் மதம் என்பதால் நம்மை அரேபியர்கள் சிந்துக்கள் என்றழைக்கவும் ஐரோப்பியர்கள் இண்டூஸ் என்று அழைக்கவும் பின்னாளில் நாம் இந்துக்களாகவும் நமது ஸநாதன தர்மம் இந்து மதமாகவும் அழைக்கப்பெற்றது.

## அரியும் சுதனும்

என்றைக்கு மனிதன் உலகில் தோன்றித் தன்னுணர்வு பெற்று இயற்கையை வணங்கத் தொடங்கினானோ அப்போதிருந்தே இந்த மதம் தொடங்கிற்று என்பார்கள். இந்து சமயத்தில் அவ்வப்போது பெரியோர்கள் பலர் தோன்றி அந்தந்த தேச, காலச் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு அடிப்படைக் கொள்கைகளுக்கு பங்கமில்லாமல் பல நல்ல அறிவுரைகளை வழங்கி மக்களை வழிநடத்திச் சென்றிருக்கிறார்கள். அப்படித்தான் சைவம், வைணவம், மாத்வம், வீரசைவம் என்ற இந்து மதம் என்ற தரு விழுதுவிட்டது. வைணவமும், சைவமும் வெவ்வேறன்றி அரியும், சிவனும் வெவ்வேறல்லர். "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று வாழ்ந்த நம் முன்னோர் இறைவனை இரண்டாக சிருஷ்டித்துக்கொண்டு எப்படி வாழ்ந்திருக்க முடியும்? வைணவமும் சைவமும் ஒன்று அரியும் சிவனும் ஒருவரே என்னும் உயரிய தத்துவத்தை ஒருமைப்பாட்டை உணர்த்தப் பிறந்த உயர்தெய்வமே ஸ்ரீ ஐயப்பன். இதனை கவியரசர் கண்ணதாசன் பாடலொன்றால் நாம் அறிந்து இன்புறலாம்.

**“செஞ்சடையும் திருமாலும் ஒன்றே என்ற**
**சீரியதோர் கொள்கையினை உணர்த்தி மாந்தர்**
**நெஞ்சமதில் திருவடியைப் பதித்து வாழ்வின்**
**நிலைஉயர நல்வழியை அவர்களுக்குக் காட்டித்**
**தஞ்சமதை வழங்குகிற சுதன்.”**

என்பதே அந்தப் பாடல். இந்துக்கள் சைவம், வைணவம் என்ற இருபெரும் பிரிவுகளாய் வழிபாடு நிகழ்த்தினாலும், தெய்வங்களைத் தேடிக் கொண்டாலும் இவ்விருவேறு பிரிவுகளை இணைக்கிற தெய்வமாக ஸ்ரீ ஐயப்பன் துலங்குகிறான். அரியும், சிவனும் ஒன்றே எனும் அரிய தத்துவத்தின் அடையாளமாக அவதரித்த பெருமான் அவன். ஸ்ரீ ஐயப்பனின் வரலாறு அறிய நமது அகமெலாம் மலரும்.

பண்டைய திருவிதாங்கூர் பந்தள நாடு என்றழைக்கப்பட்டது. இந்நாட்டைப் பாண்டிய வம்சத்தில் பிறந்த இராஜசேகரபாண்டியன் என்ற

மன்னன் ஆண்டு வந்தான். குறையில்லாத வாழ்வை இந்தக் கோமகன் ஆண்டபோது மக்கள் ஆண்டு அனுபவித்து வாழ்ந்தனர். மன்னனும் அழகிய ராணி யும், அன்பான குடிமக்களுமாய் அமைந்த திருநாட்டில் ஆட்சிபுரிந்து அகமகிழ்ந்து வாழ்ந்திருந்தான். ஆனால் மன்னனுக்கோ வாரிசு இல்லை என்ற ஒரு குறை. சிவபக்தனான அவனும், அரசியாரும் சிவனை தினமும் வழிபட்டு வந்தனர். நாட்டு மக்களும் மன்னனுக்கு வாரிசு வேண்டுமென வேண்டி நின்றனர். இந்நிலையில்,

மகிஷாசுரனின் கொடுமைகளைத் தாங்க முடியாத தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகிய மும்மூர்த்திகளும் தம் சக்திகளை ஒருங்கு திரட்டி சண்டிகா தேவி என்னும் சக்தியைப் படைத்து மகிஷாசுரனை அழிக்க ஏற்பாடு செய்கின்றனர். அவ்வாறே நிகழ்ந்தது. அவனும் அழிந்தொழிந்தான். தேவர்களும், மானிடர்களும் துயர்நீங்கி மகிழ்ந்தனர். கதை இத்தோடு முடிய வில்லை. மகிஷாசுரனின் சகோதரி மகிஷி தன்

அண்ணனுக்கு நேர்ந்த முடிவு கண்டு மனம் வருந்தி வெகுண்டு அதற்குக் காரணமான தேவர்களை அழிக்க முடிவு செய்தாள்.

அதற்கான சக்தியைப் பெறுவதற்காக அவள் பிரம்மாவை நோக்கிக் கடுந்தவம் புரிந்தாள். பிரம்மா அவள்முன் தோன்றி வரம் என்ன வேண்டும் என்று வினவ, "அய்யனே... சிவனுக்கும், விஷ்ணுவுக்கும் பிறந்த புத்திரன் அல்லாது வேறு எவராலும் எனக்கு மரணம் நிகழக்கூடாது" என வரம் வேண்டுகிறாள். அவளுக்கு மனதிற்குள் ஒரு எண்ணம் சிவனும் விஷ்ணுவும் சேர்வதாவது... அவர்களுக்குக் குழந்தை பிறப்பதாவது என்று. வரம் கிடைக்கிறது. வாங்கிக் கொண்டு தேவலோகம் சென்று தேவர்களுக்குத் தொல்லை கொடுக்கத் தொடங்குகிறாள்.

இத்தருணத்தில் தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபோது அமுதம் திரள்கிறது. தேவர்களுக்கு துர்வாச முனிவரின் சாபத்தால் ஏற்பட்ட நரைதீர இந்த அமுதமே உபாயம் என்று மகாவிஷ்ணு

யோசனை தெரிவித்திருக்கிறார். தேவர்கள் அமுதத்தை அள்ளிக் கொள்வதற்கு முன்னால் அதை அசுரர்கள் பறித்துக் கொள்கிறார்கள். மகாவிஷ்ணு மோகினி வடிவில் சென்று அசுரர்களிடமிருந்து அமுதத்தை மீட்டு தேவர்களிடம் கொடுக்கிறார். மகாவிஷ்ணுவின் மோகினி வடிவம் காண அவாவுற்ற சிவன் அவ்வாறு சென்று பார்க்கிறார். மகாவிஷ்ணு வின் மோகினி வடிவின் அழகில் மயங்கிய சிவன் அவரோடு சேர்கிறார். விளைவாக ஆண் குழந்தை யொன்று பிறக்கிறது. அக்குழந்தைக்கு சிவன் ஒரு மணிமாலை அணிவித்து பிள்ளைப் பேறில்லாத தன் பக்தன் இராஜசேகர மன்னனிடம் ஒப்படைக்க எண்ணுகிறார்.

இராஜசேகர மன்னன் தன் பரிவாரங்களோடு பம்பை நதி தீரத்திற்கு வேட்டையாடச் செல்வது வழக்கம். ஒரு நாள் அவ்வாறு வேட்டைக்குச் செல்கையில் அங்கே ஒரு குழந்தையின் அழுகுரல் கேட்கிறது. அருகில் சென்று பார்த்தால் அழகிய ஆண்குழந்தை. மணிமாலை தாங்கிய மார்புடன்



வடசபரி ஸ்ரீ ஐயப்பனின் அருட்கோலம்

அழகே வடிவாய் அக்குழந்தை. 'யாரிந்த குழந்தை?' எப்படி அங்கே வந்ததென்று அறியாமல் வியந்து நின்ற மன்னன் எதிரே ஒரு முனிவர் தோன்றி, "மன்னா இக்குழந்தை யாரென்று நீ திகைக்க வேண்டாம். உன்னுடைய பிள்ளையில்லாக் குறை தீர்க்க இவன் அவதரித்திருக்கிறான். இவனது கழுத்தில் மணிமாலை காணப்படுவதால் 'மணிகண்டன்' என்ற திருநாமமிட்டு வளர்த்துவா. இவனுடைய பன்னிரண்டாவது வயதில் இவன் யாரென்பதை நீயறிவாய்" என்று சொல்லி மறைகிறார்.

பந்தள நாட்டு மன்னனுக்குப் பெரு மகிழ்ச்சி. வாரிசு இல்லாமற் போய்விடுமோ என்று வருந்திய மன்னன் மணிகண்டன் வருகையால் வானளாவிய இன்பம் பெற்றாலும், மன்னனுக்குப் பிறகு மகுடம் சூட்டிக்கொள்ள வேண்டுமென்று மனப்பால் குடித்திருந்த பந்தள நாட்டு திவானுக்கு மட்டும் பெருத்த வருத்தமும், பேரிடிபோல் விழுந்த ஏமாற்றமும் ஏற்பட்டது. மணிகண்டன் அரச குடும்பத்தில் சீரும் சிறப்புமாக வளர்கிறான். சிவனுக்கும் விஷ்ணுவுக்கும்

பிறந்தமையால் ஸ்ரீ ஐயப்ப மணிகண்டனை ஹரிஹர புத்திரன் என்று பக்தர்கள் போற்றி மகிழ்கிறார்கள்.

நாள்கள் நகர்ந்தன. மணிகண்டன் ஒரு சிறந்த குருவிடம் வீர விளையாட்டுகளையும், வித்தைகளையும் கற்றுக்கொள்கிறான். மணிகண்டன் ஒரு சாதாரண மானுடன் அன்று; தெய்வாம்சம் பொருந்தியவன் என்று குருவுக்குப் புரிகிறது. இச்சூழலில் பந்தள நாட்டு அரசிக்கு ஓர் ஆண்குழந்தை பிறக்கிறது. மன்னனோ மணிகண்டனுக்கு மகுடம் சூட்ட எண்ணுகிறான். ஆனால் திவானோ அரசியின் மனத்தை மாற்றி அரசனுக்கும் அரசிக்கும் பிறந்த குழந்தையே நாடாளத் தகுதியுள்ளவன் எனக்கூறி மணிகண்டனை அழிக்கத் திட்டமிடுகிறான். ராணிக்கும் தன் மகனே முடிசூட்டிக் கொள்ளவேண்டுமென்ற எண்ணம். முன்னர் ஒரு சமயம் மணிகண்டனுக்கு விஷம் கொடுத்துக் கொல்ல முயன்று தோற்றுவிட்ட திவானுக்கு ராணியின் மனமாற்றம் சற்று ஆறுதலாக இருக்கிறது. திவான் கூறுவதுபோல் நடப்பதற்குச் சம்மதிக்கும் ராணி தலைவலியால் அவதியுறுவது போல் நடிக்கிறாள்.

திவானால் அனுப்பப்பட்ட மருத்துவர், “புலிப்பால் கொண்டுதான் இந்நோயைக் குணப்படுத்த முடியும்” என்று கூறுகிறார். புலிப்பால் கொண்டு வருபவர்க்குத் தன் நாட்டில் பாதியைத் தருவதாகக் கூறுகிறான் மன்னன். ஆனால் புலிப்பால் கொணர எவராலும் இயலவில்லை. மணிகண்டன் தன் தாயின் நலம் கருதித் தானே காட்டுக்குச் சென்று புலிப்பால் கொண்டு வருவதாகக் கூற மன்னனுக்கு அவனை அனுப்ப மனமில்லை. என்றாலும் மணிகண்டன் நிர்பந்திக்கவே அரைமனதோடு அவனைக் காட்டுக்குச் செல்ல அனுமதிக்கிறார்.

மணிகண்டன் தெய்வப் பிறவியாதலால் அவனுக்கு சிவனால் அனுப்பப்பட்ட பஞ்ச பூதங்கள் துணையாக இருந்தன. மேலும் தேவர்கள் அமுதுண்டு நலம் பெற்று தம் நரை நீங்கிய மகிழ்ச்சியில் இருக்கையில் மகிஷி அவர்களுக்கு தேவலோகத்தில் தொல்லைகள் பல தருகிறாள். மகிஷியை அங்கிருந்து தூக்கியெறிந்து அமுத ஆற்றின் கரையில் விழுந்த அவளை மணிகண்டன் கொல்கிறான். பிறகு புலிப்பால்

தேடிக் காட்டுக்குள் செல்கிறான் மணிகண்டன். மகிஷியைக் கொன்ற மணிகண்டனை நன்றிப் பெருக்கோடு நோக்கிய இந்திராதி தேவர்கள் வணங்கி மகிழ்கிறார்கள்.

அப்போது அங்கு தோன்றிய சிவபெருமான் இந்திரனை ஆண்புலியாகவும், தேவர்களையெல்லாம் பெண் புலிகளாகவும் வடிவெடுக்க வேண்டுகிறார். அவ்வாறே நிகழ்கிறது. பெண்புலிகள் புடைசூழ ஆண் புலியின் மீதமர்ந்த மணிகண்டன் அரண்மனைக்குள் நுழைகிறான். மன்னன் உட்பட மக்களெல்லாம் அச்சமும், வியப்புமாய் அங்குமிங்கும் சிதறி ஓடுகின்றனர்.

அன்றுதான் மணிகண்டனுக்கு பன்னிரண்டு வயது நிறைகிற நாள். அன்று முனிவன் ஒருவன் கூறியவை மன்னனுக்கு நினைவுக்கு வந்தது. "மணிகண்டன் சாதாரண மனிதன் அல்லன்" என்பது மன்னனுக்குப் புரிகிறது. மணிகண்டன் தன் தந்தையின் முன்னால் நின்று, "தந்தையே.. பெண்புலிகளை அழைத்து

வந்துள்ளேன். வேண்டுமளவு புலிப்பால் கறந்து கொண்டு தாயின் உடற்பிணி அகற்றுக" என்கிறான். உடனே மன்னன், "பகவானே... இனி என்னைச் சோதிக்க வேண்டாம். நீங்கள் காட்டுக்குப் போனபிறகு தான் இது ஒரு சதித்திட்டமென அறிந்து கொண்டேன். நான் அறியாது செய்த இந்த பிழைக்காக என்னை மன்னித்தருள வேண்டும்" என்று கூறி வருந்துகிறான்.

"நீங்கள் மன்னிப்பு கேட்க வேண்டியதில்லை. நடந்தவையெல்லாம் என் இச்சைப்படிதான் நடந்திருக்கின்றன. நான் இந்த பூமியில் எதற்காக அவதரித்தேனோ... அந்தக் காரியம் நடந்துவிட்டது. இனிநான் தேவலோகம் செல்லவேண்டும்" என்று மணிகண்டன் மொழிகிறான். "தாங்கள் நினைப்பது போலவே நடக்கட்டும் ஆனால் தாங்கள் எங்களோடு இருந்ததன் நினைவாக ஒரு கோவில் கட்ட ஆசைப் படுகிறேன். அதற்கான இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கூறுங்கள்" என்று மன்னன் வேண்ட, மணிகண்டன் தான் ஒரு அம்பை எடுத்து எய்து அது எங்கே போய் விழுகிறதோ அங்கு 18 படிகளுடன் கிழக்கு நோக்கி

தனக்கும், அருகில் மாளிகைபுரத்தம்மனுக்கும் கோவில் கட்டப் பணித்துவிட்டு தேவலோகம் சென்று விடுகிறான். அம்பு விழுந்த இடமான சபரிமலையில் மணிகண்டப் பெருமானுக்கு ஆலயம் நிறுவப்பட்டது. இதுதான் சபரிமலை ஸ்ரீ சாஸ்தா ஆலையம் தோன்றிய கதை.

மணிகண்டன் கட்டளைப்படி அகத்திய முனிவரிடம் ஆலோசனை பெற்றுக்கொண்டு இராசசேகரப் பாண்டியன் தானே மேற்பார்வையிட்டு சபரிமலையில் 18 படிகளோடு கூடிய அழகிய திருக்கோவிலைக் கட்டி முடித்தார். ஆண்டுதோறும் லட்சோபலட்ச மக்கள் ஜாதி, மத, பேதங்களின்றி மாலை அணிந்து 41 நாள்கள் கடுமையான விரதம் மேற்கொண்டு ஸ்ரீ ஐயப்பனின் பூஜைக்குரிய நெய், தேங்காய், பூஜைப் பொருட்களை ஒரு முடியிலும், வழியில் தமக்குத் தேவைப்படும் உணவு, உடை போன்றவற்றை இன்னொரு முடியிலும் கட்டி இருமுடியாகச் சுமந்துகொண்டு அய்யப்பன் திருநாமம் பாடிக்கொண்டும், ஆடிக்கொண்டும் பயணித்து

வழியில் பம்பை நீராடி, சபரிமலை அடைந்து புனிதப் பதினெட்டுப் படி வழியே ஏறி ஸ்ரீ ஐயப்பன் அருள்பெற்று திரும்புகிறார்கள்.

ஆண்டுதோறும் ஸ்ரீ ஐயப்பன் அருள்பெற இருமுடிக்கட்டிக் கொண்டு விரதமிருப்போரின் எண்ணிக்கை வளர்ந்து கொண்டே போகிறது. தொடக்கத்தில் கேரளம், தமிழகம் ஆகிய மாநிலங்களி லிருந்து மட்டுமே மலையேறிய மக்கள் இப்போது இன்னும் அதிகமாகி, அகலமாகி, பல்கிப் பெருகி இந்தியத் திருநிலத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் விரதமேற்று வரத் தொடங்கிவிட்டனர். மாநில மக்களுக்கிடையே ஒரு மகத்தான ஒருமைப் பாட்டுணர்வை ஸ்ரீ ஐயப்பன் ஏற்படுத்தியிருப்பது மறுத்தற்கியலாத உண்மையாகும். ஐயப்ப வழிபாடென்பது அகிலம் முழுதும் பரவியுள்ள பக்திப் பெருவெள்ளமாகிப் பெருமை பெற்றுள்ளது.

ஸ்ரீ ஐயப்பன் தாயுமாகி, தந்தையுமாகி சிந்தையில் நிறைந்தவன். அரி தாய்வடிவம். ஹரன்

தந்தை வடிவம். அரிஹரன் மகன் அரிஹர சுதன். ஸ்ரீ ஐயப்பனை, தர்ம சாஸ்தா, வீரமணிகண்டன், சபரிகிரீசன், சத்ருசம்ஹாரன், காந்தமலைஜோதி, ஆனந்த ரூபன், பந்தளமாமணி, வாவரின் தோழன், வன்புலிவாகனன், வில்லாளி வில்லன், பதினெட்டாம் படிக் காவலன் என்று எண்ணற்ற திருநாமங்களால் அவனுடைய பக்தர்கள் போற்றி வணங்குகின்றனர்.

ஸ்ரீ ஐயப்ப வழிபாடு ஒழுக்கத்தையும், ஒருமைப்பாட்டையும், உளத்தூய்மையையும், உடற் கட்டுப்பாட்டையும், பக்தியையும், பண்பாட்டையும் உறுதிப்படுத்துகிறது. "இந்திய நாடு உலகத்தின் பூஜையறை" என்று புரட்சித்துறவி ஸ்ரீ விவேகானந்தர் கூறுவார். உலக அரங்கில் நமக்கிருக்கிற உன்னதமான புகழே நமது ஆன்மிக உணர்வுதான். இந்தியாவின் ஒவ்வொரு பண்டிகையும் அதன் பண்பாட்டையும், கலாச்சாரத்தையும் உணர்த்துபவை. அதிலும் குறிப்பாக நமது ஐயப்ப வழிபாடு உலகம் அறிந்த தாகும். நாடே குளித்துத் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்கிற, விரதமிருந்து தன்னை வெளிச்சமேற்றிக்



சபரிமலையின் எழில்மிகு தோற்றம்

கொள்கிற உன்னத நாள்களாக ஐயப்ப விரத நாள்கள் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

‘சுவாமியே சரணம் ஐயப்பா’ என்று பக்திப் பெருக்கோடு வழிபட்டு கார்த்திகை முதல் நாளில் மாலையணிந்த பிறகு ஒவ்வொரு பக்தனிடத்திலும் ஸ்ரீ ஐயப்பனே குடிகொள்கிறான் என நம்பப்படுகிறது. ஸ்ரீ ஐயப்பன் திருக்கோவில் செல்லப்போகும் மாலை யணிந்த பக்தர்களை அவர்கள் யாராக இருந்தாலும் எந்த நிலையிலிருந்தாலும், பதவியிலிருந்தாலும் ‘சாமி’ என்றே இந்த சமூகம் விளிக்கிறது, வணங்குகிறது. அந்த சாமிகள்கூட விரதமிருந்து, வேண்டாத பழக்க வழக்கங்களிலிருந்து ஒதுங்கியிருந்து எந்நேரமும், ஸ்ரீ ஐயப்பனை நினைத்துக் கொண்டிருப்பதின் மூலமாகத் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள் கின்றனர். இத்தூய்மையானது அகத்தூய்மையும், புறத்தூய்மையுமாகும்.

ஐயப்ப பக்தர்களுக்கென்று சில விதிமுறைகள் வகுக்கப்பட்டுள்ளன. மாலையணிந்து கொள்ளும்

சாமிகளுக்கெல்லாம் தலைமைப் பொறுப்பேற்கும் பெரிய சாமிக்கு 'குருசாமி' என்று பெயர். முதல் முறையாக மாலையணிந்து கொள்பவர்கள் 'கன்னி சாமி' என்றழைக்கப்படுவர். குருசாமிகள் தங்கள் சாமிகளுக்கு இவற்றைச் சொல்லிக்கொடுப்பார்கள். அவர்கள் கூறும் வழிமுறைகள் இவைதாம்.

பூஜைக்கான குங்குமம், பூக்கள், சந்தனம், குத்துவிளக்குகள் (3), ஊதுபத்தி, பன்னீர், கற்பூரம் பசும்பால், மஞ்சள் தோய்த்த அரிசி, பஞ்சபாத்திரம் ஆகியவற்றை முன்னதாகவே எடுத்து வைத்துக் கொள்ளவேண்டும். குளிர்ந்த நீரில் நீராடவேண்டும், பின்னர் ஐயப்பன் திருக்கோல ஆடைபுனைந்து இரண்டு தேங்காய்களை மஞ்சள் பூசி வைக்க வேண்டும். பெரியோர்தம் ஆசியோடு பூஜைகளை பக்தியுடன் தொடங்கவேண்டும். 41 நாள்கள் விரதமிருக்க வேண்டும். புலனடக்கத்தோடு இருக்க வேண்டும். ஒழுக்கம், உடல் தூய்மை, நல்ல எண்ணங்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும். காமம் களைதல் வேண்டும். காலையும், மாலையும் குளிர்ந்த

நீரில் குளித்து ஸ்ரீ ஐயப்பனை பக்தி சிரத்தையோடு வழிபடவேண்டும். ஸ்ரீ ஐயப்ப பஜனைகளில் கலந்து கொள்ளவேண்டும்.

படுக்கை தலையணை இல்லாமல் துண்டை விரித்து தரையில் படுத்துக்கொள்ளவேண்டும். எளிமையாக வாழவேண்டும். புகை, புலால், போதை விலக்க வேண்டும். ஸ்ரீ ஐயப்ப பக்தர்கள் இல்லம் தவிர வேறெங்கும் உணவு உண்ணக்கூடாது. மாலை தரித்தபிறகு சந்திக்கும் ஆண்களை ஐயப்பா என்றும், பெண்களை மாளிகைபுரத்தம்மன் என்றும் சிறுவர்களை மணிகண்டா என்றும் சிறுமிகளை கொச்சி என்றும் அழைக்கவேண்டும். மாலையணிந்த பக்தர்கள் அசுப நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளக்கூடாது. கலந்து கொள்ள நேரிட்டால் அணிந்த மாலையை ஸ்ரீ ஐயப்பன் படத்திற்குச் சாற்றிவிட்டு அடுத்த ஆண்டு விரதம் மேற்கொண்டு சபரிமலைக்குச் செல்லலாம்.

இருமுடியில் ஸ்ரீ ஐயப்பனுக்குக் கொண்டு செல்லும் நெய்த்தேங்காயை சந்நிதியில் உடைத்து

அபிஷேகம் செய்து பிரசாதமாகப் பெற்றுக்கொள்ள வேண்டும். இதை சபரிமலை செல்ல வாய்ப்பில்லாத பக்தர்களுக்கு வழங்கி மகிழவேண்டும். சபரிமலைப் பயணம் முடிந்து வீடு திரும்பும்வரை பிரசாதக் கட்டினைத் தலையில் சுமந்துவர வேண்டும். வீட்டுக்குள் நுழையும் முன் வீட்டுவாசலில் விடலைத் தேங்காய் உடைத்துவிட்டு அதன்பிறகே உள்ளே போக வேண்டும். பூஜையறையில் பிரசாதக் கட்டினை வைத்து சூடம் ஏற்றி சாமி கும்பிட்ட பிறகு அவிழ்த்து மற்றவர்களுக்கு வழங்க வேண்டும். குருசாமி மூலம் மாலையை அவிழ்த்து ஸ்ரீ ஐயப்பன் படத்திற்கு அணிவித்து நிறைவு செய்ய வேண்டும்.

வேறெந்த பக்தர்களுக்கும் இல்லாத சிறப்பு ஐயப்ப பக்தர்களுக்கு உண்டு. சிவனை வணங்கு கிறவர்கள் சிவனடியார்கள், விஷ்ணுவை வணங்கு கிறவர்கள் ஆழ்வார்கள், சக்தியை வணங்குகிறவர்கள் சத்தி உபாசகர்கள், கணபதி, முருகன் ஆகியோரை வணங்குகிறவர்கள் அந்தந்த தெய்வங்களின் பக்தர்கள். ஆனால் ஐயப்பனை வணங்கி மாலை

யணிந்து சபரி செல்லப் போகிறவர்களை அய்யப்ப பக்தர்கள் என்றழையாமல் நாமெல்லாம் அவர்களை 'ஐயப்பன்மார்கள்' என்று வணங்கி மகிழ்கிறோம். பக்தர்கள் தெய்வங்களாகக் கருதப்படுகிற பேறு ஐயப்ப பக்தர்களுக்கு மட்டுமே உண்டு. மனிதனும் தெய்வமாகலாம் என்கிற மாண்பினை ஸ்ரீ மணிகண்டனே இந்த மண்ணுக்கு அருளியிருக் கிறான். அது மட்டுமல்ல; ஸ்ரீ ஐயப்ப பிரசாதத்திலும் ஒரு பேருண்மை புதைந்துள்ளது. தென்னை சிவனின் அம்சம் பசு விஷ்ணுவின் அம்சம், தேங்காயும், நெய்யும் அரியும் ஹரனும் இணைந்த வடிவம். ஸ்ரீ ஐயப்பனை வணங்குகிறவர்களுக்கு அரிஹர ப்ராப்தம் கிடைப்பதாகவே பொருள்.

(மாலை தரித்துக் கொள்ளும்போதும் புனிதப்பயணம் சென்றுவந்து கழற்றும் போதும் ஜபிக்க வேண்டிய மந்திரங்கள் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.)

## சபரி மலை செல்லும் வழி

சபரிமலைப் பயணம் முன்புபோல் அவ்வளவு கடினமானதல்ல - காடுகள் நிறைந்திருந்தும், பாதைகள் நன்றாக அமைந்துள்ளன. காட்டு விலங்குகளின் தொல்லையும் குறைந்துவிட்டது.

பந்தளம் செல்லாமல் கோட்டயத்திலிருந்து எருமேலி சென்று அங்கிருந்து சபரிமலை செல்லலாம். எருமேலியிலிருந்து 40 மைலுக்கு மேல் கால் நடையாக நடந்து பம்பையாற்றைக் கடந்து நீலமேடு சபரிமலை அடையலாம். எருமேலி ஒரு பழைய வழி. கன்னி ஐயப்பன்மார்கள் எருமேலி பாதை வழியாகத்தான் செல்லவேண்டும். சிலர் தேனி, கம்பம் வழியாகச் சென்று வண்டிப் பெரியாறு, சாலக்காயம், சத்திரம் வழியாகவும் போகின்றனர். இவ்வழியே சென்றால் 12 மைல்தான் நடந்து செல்ல வேண்டிவரும்.

சபரிமலைக்குச் செல்லும் காட்டில் ஏழு மலைகள் உள்ளன. சபரிமலையின் ஆரம்பத் தலமாகிய

எருமேலியிலிருந்துதான் பயங்கரமான காடு ஆரம்பமாகிறது. ஐயப்பனின் பிரதான பூதசாமியாகிய வாபர் கோவில் இங்கு இருப்பதால் தேங்காய் உடைத்துப் பொரி தூவி வணங்கவேண்டும். இங்குக் கன்னி ஐயப்பன்மார்கள் வேடன்போல் வேடம் பூண்டு சாஸ்தாவைப் பணிந்து, "சுவாமி திந்தக்கதோம்", "ஐயப்ப திந்தக்கதோம்" என்று பாடி ஆடுவர். பின் பக்தர்கள் தற்காப்பிற்காகக் கையில் கதையும், அம்பும் ஏந்திக் காட்டில் பிரவேசிக்க வேண்டும். காளைகட்டி என்னும் இடத்தில் இறைவனை வழிபட்டு அலஸா ஆற்றில் நீராடி ஒரு கல்லினை எடுத்துக் கல்லிடுங்குன்றில் போட்டு வணங்க வேண்டும்.

அங்கிருந்து புறப்பட்டு உடும்பாறையை அடைந்து பூதகணங்களுக்குப் பூசை செய்து கரிமலையை அடையவேண்டும். இங்குக் கிணற்றிலும் குளத்திலும் பொரி தூவிச் சற்று தூரம் சென்றால் பம்பாநதி. அதில் நீராடி மேற்சென்றால் சபரி வாழும் நீலமலையை அடையலாம். சபரியைத் தியானித்து சரங்குத்தி என்னும் அரசமரத்தை அடைந்து அம்பு,

கதைகளைப் போட்டுவிட்டு அங்கிருந்து கோவில் சிகரங்களைப் பார்க்கலாம்.

திருக்கோவிலை அடைந்து பதினெட்டுப் படிகளையும் கடந்து ஐயப்பனைப் பணிதல் வேண்டும். பதினெட்டுப் படிகள் ஏறும்போது தேங்காய் உடைத்துப் படியைத்தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டு படி ஏற வேண்டும். மாளிகைபுரத்தம்மன் கோவில் கதவுகளைத் திறப்பதே இல்லை. இங்கு தேங்காயை உடைக்காமல் உருட்டிவிடவேண்டும். அங்குள்ள பஸ்மக் குளம், கும்ப குளக் கால்வாய் முதலியவற்றில் நீராட வேண்டும். படியில் வலது பக்கத்தில் கருப்புசாமியும், இடது பக்கத்தில் கடுத்த சாமியும் இருக்கின்றனர். கன்னி மூலையில் கணபதியும் வாயு கோணத்தில் மாளிகைபுரத்து அம்மனும் வடக்குப்புரத்தில் வாபர் சுவாமியும் பரிவாரங்களாய் ஸ்ரீ தர்ம சாஸ்தா மூலஸ்தானத்தில் அமைத்திருக்கின்றனர்.

இவர்களை வணங்கி பெரிய அம்பலத்தை வலம்

வந்து மேற்குநடைவாயில் வழியாகக் கீழே இறங்கி வருதல் வேண்டும். பிறகு நெய்த் தேங்காய் உடைத்து அபிஷேக ஆராதனைகளைச் செய்து ஐயப்பனை வணங்கி வழிபட வேண்டும்.

ஆன்மிக உணர்வு கொண்ட அதிகாரிகள், அறிஞர்கள், அரசியல் பிரமுகர்கள், தொழிலதிபர்கள், கலைஞர்கள் என்று பல்துறை சார்ந்தோர் புனித யாத்திரை செல்வதுபோல் ஆண்டுதோறும் ஸ்ரீ ஐயப்ப சாமிக்கு அருட்கடனாற்றி வருகிறார்கள். செட்டி நாட்டுச் சீலர்களாய்த் திகழும் பெருமக்களும் இத்திருத்தலப் பக்தி வேள்வியில் தன் தெய்வீக உணர்வை ஆகுதியாகச் சாற்றுகிறார்கள்.

## சென்னையில் வடசபரி

தொட்ட துறையனைத்தும் துலங்குகின்ற தெய்வ அருள் பெற்றவர்கள் செட்டிநாடு அரசர்தம் குடும்பத்தார். வழிவழியாக வகுத்தலும், ஈட்டலும் வழங்கலுமாக வாழ்வாங்கு வாழ்கிற வளம் செறிந்தவர்கள் அவர்கள். தனம் தரும், கல்வி தரும்,

தளர்வறியா மனம் தரும் அம்பிகை அவர்களுக்கு அள்ளித் தந்திருக்கிறாள். அவர்களும் அதை வகையாக வழங்கியும், வளர்த்தும் வருகிறார்கள். தெய்வத் திருப்பணிகளுக்கும் அவர்கள் ஈட்டிய செல்வம் பயன்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது.

செட்டிநாட்டு அரச வம்சத்தின் இன்றைய வாழும் வள்ளலாகத் திகழ்பவர் டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்கள். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் இணைவேந்தரான அவர் பல்வேறு நிறுவனங்களைத் திறம்பட நடத்துகிற வெற்றியாளர். பண்பும் பேருள்ள மும், வாய்ந்த இந்த பெருமகனார் ஸ்ரீ ஐயப்பன் மீது அளப்பரிய பக்தி கொண்டவர். ஒத்த உணர்வுடைய ஆன்மிக ஈடுபாடு கொண்ட அன்பர்களோடு டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்களும் ஆண்டுதோறும் தவறாமல் ஸ்ரீ சபரிமலை ஐயப்பன் திருக்கோயிலுக்குச் சென்று வருகிறார்கள்.

ஒரு நல்ல நாளில் கலியுகவரதனும் கண்கண்ட தெய்வமுமான ஸ்ரீ ஐயப்பனுக்கு சென்னை இராஜா

அண்ணாமலைபுரத்தில் சிறந்ததோர் ஆலயத்தை நிர்மாணிக்கும் எண்ணம் அவருக்கு இறையருளால் தோன்றியது. இவ்வெண்ணம்கூட அவருக்கு சபரிமலை ஸ்ரீ ஐயப்பன் திருக்கோவில் செல்லும் விரத நாள்களில் வந்தது இன்னும் சிறப்பு. 'எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார் திண்ணிய ராகப் பெறின்' என்ற குறளுக்கேற்ப நினைத்த நற்காரியத்தை நடத்திய இவர்தம் திறம் போற்றுதற் குரியது.

செட்டிநாட்டரசர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்கள் சபரிமலைக்கு முதன்முதலாகச் சென்ற ஆண்டு 1973. அரசரின் அன்பிற்குகந்த நண்பரும், ஐயப்ப பக்தரும், அவருடைய தணிக்கையாளருமான திரு. பி.டி. சம்பத் குமார் அவர்கள்தான் அவரை ஐயப்பன் கோவிலுக்கு முதலில் அழைத்துச் சென்றவர். திரு. சம்பத்குமார் திரு எம்.ஏ.எம்.ஆர் அவர்களிடமும், குமாரராஜா முத்தையா அவர்களிடமும் பாசம் மிகக் கொண்டவர். உடல்நலம் பாதிக்கப்பட்ட நிலையில்கூட தம் இறுதி நாள்வரை ஐயப்ப பக்தராகவே வாழ்ந்த பெருமகனார்

அவர். ஆண்டுதோறும் விரதமிருந்து சபரிமலை ஐயப்பனைத் தரிசித்துத் திரும்புவதைத் தன் ஆயுட் பணியாக ஏற்றுக்கொண்டவர். அவர்தான் 1973ல் டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்களை விரதம் மேற்கொள்ளச் சொல்லி சபரிமலைக்கு வரக் கூறினார். அரசரும் அதற்குச் சம்மதித்து அவ்வாண்டிலேயே அவரையே குருசாமியாக ஏற்றுக்கொண்டு இருமுடி கட்டிக்கொண்டு ஏறத்தாழ 50 பக்தர்களோடு ரயில் மூலம் சபரிமலை அடைந்துள்ளார்கள். 22.12.1973 அன்று ஸ்ரீ ஐயப்பன் அவருக்குப் பேரொளிப் பிழம்பாகக் காட்சி தந்தான்.

அப்போது அரசரின் உள்ளத்தில் மின்னலாய் ஓர் எண்ணம் உதித்தது. ஆலய வழிபாடுகளை முடித்தபின் அங்கேயே தன் குருசாமி திரு. பி.டி. சம்பத்குமார் அவர்களிடம் தம் உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்த அவரும் அதை ஆமோதித்து வரவேற்று, அதை ஸ்ரீ ஐயப்பன் கட்டளையாகவே கருதி நிறைவேற்ற ஐயனே உதவுவான் என்று மகிழ்ந்தார். தமிழகத்தில் உள்ள ஏழை எளியவர்கள், இத்திருக்கோவிலால்



வடசபரியின் வண்ணமலர் எழில் கொஞ்சும்
பதினெட்டு படிகள் - பூஜை நடைபெறும் காட்சி

பயன்பெறுவதோடு வடசபரியாகவே இது விளங்கும் என்று எண்ணிய அரசர் சபரிமலைத் திருக்கோவிலில் ஒலித்த லயவாத்திய ஒலியில் ஒருமுகமாகத் தன் எண்ணத்தால் சிந்தனை முழுமையையும் ஐயப்பனே ஆட்கொள்ள அருள்பெற்றார். அந்த எண்ணம் ஈடேறி, பிரார்த்தனை நிறைவேறி சென்னையில் இத் திருக்கோவில் தோன்றித் திகழ்கிறது.

சென்னைக்குத் திரும்பிய டாக்டர் ஏம்.ஏ.எம்.ஆர். அவர்களும், நண்பர்களும் இத்திருவருள் திருப்பணி தொடர்பாகச் சிந்திக்கவும், செயல்படவும் தொடங்கினர். இதையறிந்து மகிழ்ந்த செட்டி நாட்டரசரும் அவர்தம் தந்தையாரும் வள்ளலுமான டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள் செட்டிநாட்டு அரண்மனைக்கெதிரிலேயே கோவில் கட்டுவதற்கான இடத்தைத் தந்துதவினார்கள். ஒரு நல்ல நாள் குறிக்கப்பட்டு வள்ளல் வழங்கிய இடத்தில் முறையாகக் கால்கோள் விழா நடந்தது.

திறமை மிக்க ஸ்தபதியார் ஆகமமுறைப்படி

இத்திருக்கோவில் தோன்றவும், துலங்கவும் திட்டமிடத் தொடங்கினார்கள். பலமுறை அவர்கள் சபரி மலைக்கும் சென்று ஆராய்ந்து அளவெடுத்து, தேவையான தகவல்களையெல்லாம் தொகுத்துத் திரட்டி திருக்கோவில் திருப்பணியை மேற்கொண்டனர். மூலவராக விளங்கும் ஸ்ரீ ஐயப்பன் சிற்பத்தை நாகர்கோவிலைச் சேர்ந்த புகழ்வாய்ந்த ஸ்தபதி பட்டன் ஆச்சாரி உருவாக்கியுள்ளார். பழங்கால முறைப்படி முதலில் மெழுகு வடிவம் அமைத்து அதை மக்கள் பார்வைக்கு வைத்தபிறகு கருக்கட்டும் வேலை தொடரும். பிறகு தங்கம், வெள்ளி போன்ற ஐம்பொன் உலோகங்களையும் உரிய அளவுப்படி சேர்த்து உருக்கி ஸ்ரீ ஐயப்பன் திருவுருவம் செய்யப் படும். இத்திருவுருவம் செய்யும்போது பக்தர்கள் சாமியே சரணம் ஐயப்பா என்று பக்திப் பெருக்குடன் விண்ணதிர பேரொலி எழுப்ப, மணியோசையும் இணைய இம்முறைப்படி திருவுருவம் வார்க்கப்பட்டது.

அருள்தரும் ஸ்ரீ ஐயப்பன் திருவுருவம் நாகர்கோவில் கிருஷ்ணன் கோவிலிலிருந்து உரிய

வழிபாடுகளுக்குப் பிறகு மெய்யன்பர்களுடன் சென்னை நோக்கி 25.1.81ல் பயணம் தொடங்கியது. ஸ்ரீ ஐயப்பன் கன்யாகுமரி, திருச்செந்தூர், திருநெல்வேலி, குற்றாலம், ஸ்ரீவில்லிபுத்தூர், திருப்பரங்குன்றம், மதுரை, பழனி, கோவை, திருவானைக்காவல், வலையப்பட்டி, இளையாத்தங் குடி, பிள்ளையார்பட்டி, வயிரவன் கோயில், கீழச்சிவல் பட்டி, குன்றக்குடி, ஆத்தங்குடி, காரைக்குடி, அரியக் குடி, தேவக்கோட்டை, கானாடுகாத்தான், இராயவரம், சுவாமிமலை, வைத்தீஸ்வரன்கோயில், சிதம்பரம், திருத்தணி முதலிய திருத்தலங்கள் வழியாக 9.2.81 அன்று சென்னை வந்து சேர்ந்தார்.

இத்தலங்களிலெல்லாம் அங்குள்ள பொது மக்களும், பக்தகோடிகளும் குடும்பம் குடும்பமாக வந்து குவிந்து வரவேற்றும், வழிபட்டும் ஸ்ரீ ஐயப்பன் மீதுள்ள தங்களின் பற்றினையும், பக்தியினையும் வெளிப்படுத்தி மகிழ்ந்தனர். ஏறத்தாழ 7000 கி. மீட்டர் திருவுலா சென்றுவந்த பிறகு தருமமிகு சென்னையின் எல்லைக்குள் வரும்போது ஸ்ரீ ஐயப்பனை

பக்தரெல்லாம் மங்கல வாத்தியங்கள் முழங்க, வரவேற்று இராஜா அண்ணாமலைபுரம் கோவிலுக்குள் அழைத்துச்சென்ற காட்சி கண்கொள்ளாக் காட்சி. அன்று அந்நிகழ்ச்சியில் கலந்து கொண்டோர்க் கெல்லாம் அது ஆனந்த ஆன்மிக அனுபவமாக இன்னமும் நெஞ்சில் இனிப்பதாயிருக்கிறது.

இராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீ ஐயப்பன் ஆலயம் 'வடசபரி' என்று அவனை வணங்கும் பக்தர் களால் வழங்கப்படுவது குறிப்பிடத்தக்கது. சபரிமலை ஸ்ரீ ஐயப்பன் திருக்கோவிலைப் போலவே பதினெட்டு படிகள் இத்திருக்கோவிலுக்கும் உள்ளன. பூமி யிலிருந்து இருபத்திரண்டு அடிக்குமேல் ஸ்ரீ ஐயப்ப சன்னிதானம் அமைக்கப்பட்டுள்ளது.

இவ்வாலயத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ ஐயப்பன் சன்னிதியுடன், கன்னிமூல கணபதி, நாகராஜா, மாளிகைபுரத்தம்மன், சின்னக்கருத்தசாமி, கருப்பாயி, பெரிய கருத்தசாமி ஆகிய தெய்வங்களும் இங்கே கோவில் கொண்டுள்ளன.

*29.1.1982* அன்று இத்திருக்கோவிலின் குடமுழுக்குவிழா பெருங்கடலெனக் கூடிய லட்சோப லட்ச பக்தர்களின் பக்திப் பரவசம்படற, மங்கல வாத்தியங்கள் முழங்க மிகச் சிறப்பாக நடந்தேறியது. சிருங்கேரி ஸ்ரீ சாரதாபீடம் ஜகத்குரு மகா சந்நிதானம், ஸ்ரீ சந்நிதானம் ஆகியோரின் முன்னிலையில் வேதங்கள், தேவாரத் திருப்பாடல்கள் முழங்க நடந்த இக்குடமுழுக்கின் போது அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பக்தர்களால் சபரிமலையிலிருந்து கொண்டு வரப்பட்ட ஐயப்ப ஜோதியானது சென்னைச் சபரியின் பதினெட்டு படிகள் வழியே மேலேறி ஐயப்பன் சன்னிதி யில் திருவிளக்கு ஏற்றப்பட்டது சிறப்பு. 1994லும் குடமுழுக்குவிழா சிறப்பாக நடந்தது.

நாள்தோறும் ஸ்ரீ ஐயப்பனுக்கு அபிஷேகமும், ஆராதனைகளும் முறைப்படி நடைபெற்று வருகின்றன. ஆண்டுதோறும் மண்டல பூஜை காலங்களில் இலட்சார்ச்சனை நடைபெறுகிறது. பிரமோற்சவத்தின்போது ஸ்ரீ ஐயப்பன் வெள்ளித் தேரில் வீதி உலா வர வெள்ளித் தேரும், பக்தர்கள்

ஸ்ரீ ஐயப்பனைத் தங்கள் கரங்களால் இழுத்துப் பேரானந்தமும், பேரருளும் பெற தங்கத் தேரும் உருவாக்கப்பட்டுள்ளன. திருத்தேர் இழுக்கப்படும் நேரங்களில் ஸ்ரீ ஐயப்பனின் பேரழகைக் கண்டு பேருவகை கொண்டு பக்தி வெள்ளத்தில் மூழ்குவர் பக்தர்கள். இத்திருக்கோவிலின் கீழ்தளத்தில் இலக்கிய, ஆன்மிக நிகழ்ச்சிகள் நடக்க வாய்ப்பாக சிறந்த அரங்கமொன்றும் அமைக்கப்பட்டுள்ளது.

இத்திருக்கோவில் அறத்தின் தலைவராக அண்ணாமலைப் பல்கலைக்கழக இணைவேந்தர் செட்டி நாட்டரசர் டாக்டர் எம்.ஏ.எம். இராமசாமி அவர்கள் விளங்குகிறார்கள். கௌரவச் செயலாளராக திரு. ஏ.ஆர். இராமசாமி அவர்களும் கௌரவப் பொருளாளராக திரு. கே. சிதம்பரம் அவர்களும் பணியாற்றுகிறார்கள்.

கீழ்க்காணும் பெருமக்கள் உறுப்பினர்களாக அமைந்துள்ளனர். திருவாளர்கள் M.S.RM. மெய்யப்ப செட்டியார், O M SP L A L அழகப்பச் செட்டியார்,

R. சுந்தரம் ஆர்கிடெக்ட் பெங்களூர், வி. ஜெயராமன் ஆடிட்டர், S RM PL சுப்பிரமணிய செட்டியார், காளைராஜா செட்டியார், M.A.M.M. அண்ணாமலை செட்டியார், M.A.M.R. முத்தையா செட்டியார், இராமநாதன் பழனியப்பன், மோகன் பராசுரன்.

இத்திருக்கோவிலின் 3ஆவது குடமுழுக்குவிழா 2008ஆம் ஆண்டு மே மாதம் 7ஆம் நாள் மிகச் சிறப்பாக நிகழவிருக்கிறது. ஸ்ரீ ஐயப்ப பக்தர்கள் திரளாகக்கூடி மகிழும் தெய்வத் திருவிழாவாக இது அமையப் போகிறது.

சென்னை நகரின் சிறப்பான மையத்தில் மக்களெல்லாம் வந்து திரண்டு வணங்கி மகிழும் வாய்ப்பாக இத்திருக்கோவில் அமைந்துள்ளது. ஆண்டுதோறும் இத்திருக்கோவிலுக்கு பக்தர்கள் விரதமிருந்து இருமுடி சுமந்து வருகிறார்கள். இங்கே மண்டல பூஜை, மகர ஜோதி தரிசனம், பிரமோத்சவம், விஷு கனி தரிசனம் ஆகிய விழாக்கள் உரிய

நாள்களில் சிறப்பாக நடைபெறுகின்றன. ஒவ்வொரு விழாவின்போதும் சபரிமலைக்குச் சென்று தரிசிப்பதைப் போன்ற சூழலும், சுகமும் உணர்வும், உயிர்ப்பும் பக்தர்கள் பெறுகிறார்கள். காடு மேடுகளை யெல்லாம் கடந்து தென்சபரி சென்று ஐயப்பனை தரிசிக்க இயலாதோரெல்லாம் இந்த வடசபரிக்கு வந்து வணங்கிச் செல்கின்றனர். குறிப்பாகத் தாய்க் குலமும், வயது முதிர்ந்தோரும் இவ்வாலய வழிபாட்டிலேயே ஐயப்ப வழிபாட்டு நிறைவைப் பெறுகிறார்கள்.

கவியரசர் கண்ணதாசன் அவர்கள் தன் கவிதை யொன்றில் இந்த நிறைவைப் பாடியுள்ளது இங்கு நினைவு கூரத்தக்கதாகும்.

**முன்னையோர் சபரிசென்று**
**முறைப்படி வணங்கினார்கள்**
**பின்னையோர் அவ்வாறாகப்**
**பிழையின்றிப் பணிந்துநின்றார்**
**மன்னவர் குலமோஅந்த**
**மகத்தான தேவன்தன்னை**

**சென்னைக்கே கொண்டுவந்தார்**

**சீருடன் அவர்கள் வாழ்க.**

கவியரசர் கண்ணதாசன் அவர்களைப் போலவே இன்னும் பல கவிஞர்கள் வடபசரி ஐயப்பனை வணங்கிப் பாடியிருக்கிறார்கள்.

**அண்ணா மலைபுரத்தில்**

**அய்யப்பன் ஆலயத்தை**

**அண்ணா மலையரசர்**

**அருள்வலியால் ஆக்கிவைத்தார்**

**கண்ணால் தரிசித்துக்**

**கைகூப்பித் தொழுவார்க்கு**

**நண்ணா நலமெல்லாம்**

**நண்ணுவது திண்ணமென்பேன்**

என்று காப்பியக் கவிஞர் வாலி தன் அழகுத் தமிழை ஐயப்பனுக்கு அணிவித்து மகிழும்போதே அண்ணாமலை அரசருக்கும் அன்பொழுக நன்றி பாராட்டி நிறைகிறார். சங்கீத பூஷணம், சிற்பி, கலைமாமணி ஆ.க. முத்துகுமாரசாமி, வடசபரி

ஐயப்பன் பிள்ளைத் தமிழ் பாடி ஐயனுக்குத் தமிழலங்காரம் செய்து தாள் பணிந்து வணங்கி யுள்ளார்.

இத்திருக்கோவில் தோன்றி இருபத்தாறு ஆண்டுகள் நிறைகின்றன. தொட்டதெல்லாம் துலங்கும் வண்ணம் தொடங்கிய தொழில்களிலும், பெருந்திட்டங்களிலும் வெற்றி பெறுகிற பெறும்பேறு பெற்ற குடும்பம் அரச குடும்பம். வகுத்தலும், ஈட்டலும், வாரி வழங்கலுமாய் வள்ளன்மை மிகுந்து விளங்கும் அரச குடும்பம் இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழ் வளரவும் முயன்றுழைப்பதைத் தமிழகம் அறியும்.

தமிழினம் செழித்தோங்கச் செய்கிற சிறந்த பணியையும் இவர்கள் செய்து வருகிறார்கள். இவற்றோடு ஆன்மிகத் தொண்டினுக்கும் அள்ளி வழங்கி வருகிறார்கள். வடசபரி ஸ்ரீ ஐயப்பன் திருக்கோவில் அரச குடும்பத்தின் ஆன்மிகத் தொண்டினுக்கு அத்தாட்சியாக நாளும் விளங்குகிறது.

இவ்வாலயத்தின் தங்க ரதம் புகழ் வாய்ந்தது. அது குறித்து அறிய வரும்போது நம் நெஞ்சமெலாம் நிறையும், மகிழும். தங்க ரதம் குறித்த சிறு தகவல் வருமாறு:

வடசபரியில் வலம் வரும் தங்க ரதத்தின் மொத்த உயரம் - 11 அடி 1 அங்குலம். கீழே உள்ள செவ்வக ரத பட்டரையில் சுவாமி ஐயப்பனுடைய வாழ்க்கைச் சரித்திரம் நகாசு புடைப்பு உருவமாக வேலைப்பாடு களுடன் அமைக்கப்பட்டு உள்ளது.

சரித்திரத்தில் பந்தளராஜன் குழந்தை வரம் வேண்டி சிவபெருமானை வழிபடும் காட்சி முதல் ஐயப்பன் தனது தாயின் பிணி நீங்க புலிப்பால் கொண்டு வரும் காட்சி மற்றும் சுவாமி ஐயப்பனுக்கு பந்தளராஜன் கோவில் கட்டி தரும் காட்சி வரை, மொத்தம் 15 முக்கியமான காட்சிகள் சிற்ப வேலைப்பாடுகளுடன் வடிவமைக்கப்பட்டுள்ளது. மேலும் ஐயப்பன் கோவில் என்றாலே அனைவருக்கும் முதலில் நினைவுக்கு வருவது 18 படிகள். இந்தக்

கருத்தை மூலமாகக் கொண்டு 18 படிகளையும் செவ்வக ரத பட்டரையில் 18 தூண்களாக நிர்மாணிக்கப்பட்டுள்ளது.

18 தூண்களிலும் பதினெட்டு வியாழங்கள் அமர்ந்து இருப்பதைப் போலவும் பதினெட்டு வியாழங்களும் ஐயப்ப ரதத்தை தாங்கி இருப்பதைப் போலவும் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. வியாழங்கள் ஒவ்வொன்றும் தனது வலது கரத்தை உயர்த்தி சுவாமியை வணங்குவது போல் அமைக்கப்பட்டுள்ளது.

யானையின் துதிக்கையையும் சிங்கத்தின் உடல் அமைப்பையும், பாம்பின் கண்களையும் கொண்ட தோற்றமே வியாழம் என்று அழைக்கப்படுகிறது. இந்த தோற்றத்தை பண்டைய காலங்களில் நமது முன்னோர்கள் கோவில்களில் சிற்பமாக வடித்துள்ளனர்.

செவ்வக ரத பட்டரையில் நான்கு விளிம்பு களிலும் கந்தர்வர்கள் சுவாமியை வணங்குவது

போலவும், மேலும் பட்டரையின் பின் பகுதியில் ரிசப குஞ்சரம் என அழைக்கப்படும் ஒரு வகை சிற்பம் வடிவமைக்கப்பட்டுள்ளது.

இதன் சிறப்பு என்னவெனில் யானையும் ஒரு காளையும் முகப்பகுதி இணைந்து இருப்பது போல் உள்ள தோற்றம். யானையின் உடலை மறைத்துப் பார்த்தால் காளையின் முழுஉடல் அமைப்பு நன்றாக தெரியும். காளையின் உடலை மறைத்து பார்த்தால் யானையின் முழு உடல் அமைப்பு நன்றாக தெரியும். இது போன்ற சிற்பங்களை நமது முன்னோர்கள் வடிவமைத்துள்ளனர்.

வியாழங்கள் மற்றும் ரிசப குஞ்சரம் போன்ற சிற்பங்கள் கி.பி.12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தஞ்சை மாவட்டம், கும்பகோணம் வட்டம், தாராசுரம் ஸ்ரீ ஐராவதேஸ்வரர் ஆலயத்தில் உள்ள சிற்பங்களில் இருந்து படி எடுக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இது ராஜராஜசோழன் மகன் ராஜேந்திர சோழனால் கட்டப்பட்டது.

மேலும் செவ்வக ரத பட்டரையின் மேல் பகுதியில் உள்ள பத்ம பீடம் 8 இதழ்கள் கொண்ட தாமரையாக வடிவமைக்கப்பட்டு ஒவ்வொரு இதழ்களிலும் ஒரு லெக்ஷ்மி வீதம் எட்டு இதழ்களிலும் அஷ்டலெக்ஷ்மிகள் புடைப்பு உருவமாக செய்யப்பட்டு உள்ளது. பத்மபீடத்தின் மேல் சுவாமி அமரும் சதுர பத்ம பீடத்தின் மேல் பகுதியில் அரைபுள்ளர்கள் பஞ்சவாத்தியங்கள் இசைப்பது போல் சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. பத்ம பீடத்தில் இருந்து 8 தூண்கள் மேல் விமானப் பகுதியைத் தாங்கி இருக் கின்றது. 8 தூண்களும் விமானத்தின் முதல் பத்ம பகுதிக்கும் இடையில், 8 யாழிகள் விமானத்தை தாங்கி இருப்பது போல் அமைக்கப்பட்டுள்ளது. சுவாமிக்கு மேல் பகுதி அதாவது விமானத்தின் உள் கூட்டுப் பகுதியில் தாமரையைக் கவிழ்த்தது போல் நகாசு வேலை செய்யப்பட்டு உள்கூடு மூடப்பட்டு உள்ளது.

விமானத்தின் முதல் விதானப் பகுதியில் யானைகள் எதிர் எதிர் திசையில் கொடிக்கருக்குகளை இழுத்துக் கொண்டு நிற்பதுபோன்ற தோற்றம்

புடைப்பு உருவமாகச் செய்யப்பட்டு உள்ளது. விமானப் பகுதியின் முதல் அடுக்கிற்கும் இரண்டாவது அடுக்கிற்கும் இடையில் எட்டுத் திக்குகளிலும் எட்டு கந்தர்வர்கள் கையில் மாலையுடன் நிற்பது போல் சிற்பங்கள் பொருத்தப்பட்டு உள்ளன. மூன்றாம் அடுக்கு கிரீடத்தில் எட்டு திருவாட்சிகளும் அதற்கு மேல் கலசமும், கலசத்திற்கு குடையும் அமைக்கப் பட்டுள்ளது.

ஸ்ரீ ஐயப்ப சுவாமியின் ரதத்தை இரண்டு குதிரைகள் இன்முகத்துடன் இழுத்துச் செல்வதுபோல் அமைக்கப்பட்டு உள்ளது. ரதசாரதியாக பிரம்ம தேவர் தாமரை பீடத்தில் அமர்ந்து ரதத்தைச் செலுத்துவது போல் அமைக்கப்பட்டு உள்ளது.

தங்க ரதத்தைப் போலவே இத்திருக்கோவிலில் வெள்ளி ரதமும் செய்யப்பட்டுள்ளது. இத்திருத்தேர் பிரம்மோற்சவத்தின்போது வீதி உலா வருகிறது. ஐயப்ப பக்தர்கள் ஸ்ரீ ஐயப்பனை தரிசித்து பக்திப் பரவசம் அடைகிறார்கள்.

# சுவையான சில செய்திகள்

## 18 படிகள் ஏன்?

சிவபெருமான் 96 தத்துவங்கள் கடந்த மூர்த்தி. முருகப் பெருமான் 36 தத்துவங்கள் கடந்த தெய்வம். அரிஹரபுத்திரன், மணிகண்டன், தர்மசாஸ்தா என்றெல்லாம் வழங்கப்பெறும் ஸ்ரீ ஐயப்பன் 18 தத்துவங்களைக் கடந்தவர். ஒவ்வொரு படியும் ஒரு தத்துவம். இறைவனை தரிசிக்க இந்த 18 தத்துவங்களை நாம் கடந்தேறவேண்டும். அவையாவன: மெய், வாய், கண், மூக்கு, செவி (5 இந்திரியங்கள்), அனிமா, லிகிமா, மகிமா, ஈசத்தவம், வசித்வம், பராகாமயம், புத்தி, இச்சா (அஷ்டமா சித்திகள்-8), சத்வம், ரஜஸ், தம்சம் (3 குணங்கள்), ஞான, அஞ்ஞானம் ஆகியனவாகும்.

## கம்பங்குடி வம்சம்

சபரிமலையைச் சுற்றியுள்ள சிற்றூர்களில் கரந்தையர் பாளையம் குறிப்பிடத் தகுந்ததாகும். அங்கே இறைவனிடத்துப் பெரிதும் பற்று கொண்ட

## திருவுலா வரும் எழில் மிகு ரதங்கள்



தங்கரதம்



வெள்ளிரதம்

அந்தணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவரும் அவரது மனைவியும் இல்லற மாண்புகள் நிறைந்து வாழ்ந்தனர். அடியார்களை உபசரிப்பது, பாதபூஜை செய்து போற்றுவதென்று நிறைந்த மனமுடையவரா யிருந்தனர். தாயின் தலைவலி நீங்குவதற்காகப் புலிப்பால் கொண்டுவர காட்டிற்கு அனுப்பப்பட்ட மணிகண்டன் அவர்களுடைய குடிலுக்கு வருகிறான். அப்பாலகனை அவர்கள் அன்புள்ளத்தோடு வரவேற்று உபசரிக்கிறார்கள். புலிப்பால் பெறுவதற்காகத் தன்னைப் பெற்றோர் அனுப்பியிருப்பதாக அவன் கூறியபோதுஅவர்கள் அஞ்சி அதிர்ச்சியடைகிறார்கள். பெற்றோர்தம் கல்நெஞ்சமறிந்து கலங்குகிறார்கள். ஆனால் அவ்வாறு அஞ்சத் தேவையில்லை எனக்கூறி தரிசனம் காட்டி தன் மெய்ப்பொருளை திருத்தோற்றம் காண அருள்கிறான் மணிகண்டப் பெருமான். பக்தி வெள்ளம் பெருக்கெடுத்தோட அந்தத் தம்பதிகள் அவனை வலம்வந்து வணங்குகிறார்கள். ஐயனும் அமுதூட்டிய அந்த அன்புத் தம்பதியர்க்கு ஒரு அடிமைச் சீட்டு தருகிறான். தான் எப்போதுமே அவர்களுடைய உடைமையாகவும், அன்பினுக்கு

உகந்தவனாகவும் இருப்பதாகக் கூறுவதோடு 'கம்பங்குடி' என்ற வம்சப் புகழினையும் அளிப்பதாக அருள்பாலிக்கிறான். இவ்வம்சா வழியினர் இன்றும் கேரளத்தில் ஸ்ரீ ஐயப்பனின் அடிமைகளாக வாழும் பெருமை பெற்று விளங்குகிறார்கள்.

## மாளிகைபுரத்தம்மன்

சபரிமலைக்குச் செல்பவர்கள் மாளிகைபுரத் தம்மனையும் வழிபட்டுத் திரும்புகிறார்கள். யாரிந்த மாளிகைபுரத்தம்மன்? சபரிமலை ஸ்ரீ சாஸ்தா மணிகண்டனாய் சம்ஹாரம் செய்த மகிஷிமுகிதான் இந்த மாளிகைபுரத்தம்மன். அசுரர்களும், தேவர் களும் மோதிப் போரிட்டுக் கொண்டிருக்கும்போது மகிஷி அசுரர்கள் பக்கத்தில் நின்று மோதும்போது எதிரில் தேவர்களோடு ஒரு சிறுவன் வில்லும் அம்பும் ஏந்தி நிற்பது அவளுக்கு வேடிக்கையாக இருக்கிறது. அலட்சியமாக அந்தச் சிறுவனை - மணிகண்டனைப் பார்த்துச் சிரிக்கிறாள். ஆயிரக்கணக்கான உருவங் களைப்பெறும் அவள் விட்ட கோடிக்கணக்கான பானங்களை அவன் இலகுவாக உடைத்தெறிந்தது

கண்டு அஞ்சினாள். பின் அவனுடன் நேரிடையாகவே மல்யுத்தத்தில் இறங்குகிறாள். மணிகண்டனோ அவளைத் தன் கைகளால் தூக்கிச் சுழற்றி பந்தாடுவது போல் எறிந்து விளையாடுகிறான். இறுதியில் அவளைத் தூக்கி வீச அலஸா நதிக்கரையில் போய் விழுகிறாள். அவள் மீது ஏறிநின்று நர்த்தனம் புரிகிறான் மணிகண்டன்.

தேவர்களுக்கெல்லாம் மகிழ்ச்சி. அவன்மீது பூமாரி பொழிந்து மகிழ்ந்து கரம் உயர்த்தி வணங்கினர். ஈசனும், திருமாலும், நான்முகனும் ஐயனை வாழ்த்தியருளினர். பிறகு மகிஷி வீரமணிகண்டனை வணங்கி பாப விமோசனம் பெறுகிறாள். மணிகண்டன் அருளால் பாப விமோசனம் பெறும் அவள் தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு வேண்டுகிறாள். மகிஷிக்கு தேவ உடல் கொடுத்தமையால் திருமணம் செய்து கொள்ள இயலாதென்றும் அவளைத்தன் சகோதரியாகக் கருதுவதாகவும் கூறி மாளிகை புரத்தம்மன் என்ற பெயரில் தன் அருகில் இருக்கலாமென்று அருளினான். தன்னை தரிசிக்க

வருபவர்களெல்லாம் அவளையும் வணங்குவர் என்று கூறினான். அவ்வாறே பக்தர்கள் அவளையும் வணங்குகின்றனர்.

## கல்லிடுங்குன்று

மகிஷியைக் கொன்று அலஸா நதிக்கரையில் போய்விழுமாறு தூக்கி எறிகிறான் மணிகண்டன். மகிஷி இறந்தபோதிலும் அவள் பெற்ற வரங்கள் காரணமாக உடல்மட்டும் அழியாது வளர்ந்து கொண்டே இருக்கும் தன்மை பெற்றிருந்தது. அது மலைபோல் வளர்ந்து ஈரேழு உலகத்திற்கும் பாதிப்பு ஏற்படும் என அஞ்சிய பிரமதேவன் மணிகண்டனை அணுகுகிறார். மணிகண்டன் தன் கால் பெருவிரலால் அவ்வுடலை நெட்டித் தள்ள அது நதிக்கப்பால் சென்று விழுந்தது. தேவர்கள் ஆளுக்கு ஒரு கல் வீதமாய் எடுத்தெறிந்து அவ்வுடலை மூடினார்கள். அந்த இடத்திற்கு கல்லிடுங்குன்று என்று பெயர். இன்றும் தரிசனத்திற்கு வரும் பக்தர்கள் அலஸா நதியில் குளித்தெழுந்து அலஸா மேட்டில் கல்லெறிந்து செல்வதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள்.



செட்டி நாட்டரசர் ராஜாசர் முத்தையா செட்டியார் அவர்களும்
அவர்தம் துணைவியார் திருமதி ராணிமெய்யம்மை ஆச்சி அவர்களும்

## எருமேலி

ஸ்ரீ மணிகண்டன், பூதங்களின் தலைவனான வாபரனை தன்னைத் தரிசிக்க வரும் பக்தர்களை வனவிலங்குகளிடமிருந்து பாதுகாக்க அரணாகவும், கோட்டையாகவும் விளங்கவேண்டும் என்று ஆணையிட்டதன் பேரில் வாபரனும் அரக்கர்களை அதற்காக நியமித்து ஓரிடத்தில் கோட்டையாக நிற்கச் செய்கிறான். இந்த இடத்திற்கு மகிஷி மாரி வாகனம் என்று பெயர். இதை எரிமேலி என்று அழைக்கிறார்கள். இப்போதும் ஸ்ரீ ஐயப்பனைத் தரிசிக்க வரும் பக்தர்கள் முதலில் வாபரனை வணங்கி வழிபட்ட பிறகுதான் பயணத்தைத் தொடர்கிறார்கள்.

## பொன்னம்பல மேடு

வளர்ப்புத் தந்தையான மன்னன் இராஜ சேகரனின் வேண்டுகோளின்படி புலிப்பால் கொணர காடு நோக்கிப்புறப்பட்ட மணிகண்டன் நாட்டின் எல்லையைக் கடந்து காட்டிற்குள் நுழைந்ததும் சிவனிட்ட ஆணைப்படி வீரபத்திரனும், சிவ கணத்தவர்களில் ஒருவனுமான வாபரனும், ஐயனை

எதிர்கொண்டு அழைக்கிறார்கள். மணிகண்டனுக்கு ஆதரவாகவும், துணையாகவும் விளங்கப்போவதாக உரைக்கிறார்கள். அவர்களோடு மணிகண்டன் புறப்பட்டு பம்பா நதிக்கரைக்கு வந்து சேர்கின்றனர். பம்பா நதிக்கரையில் ஆயிரக் கணக்கான முனிவர்கள் தவம் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர் களெல்லாம் மணிகண்டன் வருவதறிந்து மகிழ்ந்து வரவேற்கக் காத்திருக்கிறார்கள். ஐயன் வந்து சேர்ந்ததும் அவனைச் சுற்றி வலம் வந்து திருவடி போற்றி வணங்கி மகிழ்கின்றனர். பின் அவர்கள் தங்கள் தபோ வலிமையால் அம்மலை உச்சியில் தங்கத்தாலான சிங்காதனத்தில் அமர்த்தி ஆகம முறைப்படி அவன் சொரூபத்தை பிரதிஷ்டை செய்கின்றனர். அம்மலைச் சிகரம்தான் இன்று பொன்னம்பல மேடு என்றும் காந்த மலை என்றும் பெயர் பெற்று விளங்குகிறது. ஐயன்கோவில் கொண்டுள்ள ஐந்து தலங்களுள் ஒன்று இது. இது பம்பை நதியிலிருந்து பத்துமைல் தொலைவில் இருக்கிறது.



திரு. எம்.ஏ.எம். குமார ராஜா முத்தையா அவர்கள்
அவர்தம் துணைவியார் திருமதி குமார ராணி
டாக்டர் மீனா முத்தையா அவர்களும்

## சமய இலக்கியங்களில் சாஸ்தா

உலகனைத்தும் ஆள்கிற காரணத்தால் ஸ்ரீ ஐயப்பனுக்கு சாஸ்தா என்ற பெயரும் உண்டு. சாஸ்தா, மகா சாஸ்தா, சத்ரு சாஸ்தா, ஜீவ சாஸ்தா, சர்வ சாஸ்தா, பிர சாஸ்தா என்று ஆறு விதமாக மகாலட்சுமி கல்பத்தில் கூறப்பட்டுள்ளது. "சாத்தனை மகனாக வைத்தார்" என்று சிவனைப் போற்றுகிறார் திருநாவுக்கரசர்.

தமிழ்நாட்டு கிராமங்களில் சாஸ்தா, கிராம தேவதையாக, குலதெய்வமாகப் பூஜிக்கப்படுகிறார். சாஸ்தாவை 'சாத்தான்' என்று கூறுவோருண்டு. இதை சைத்தான் என்பதாகப் பொருள் கொண்டுவிடக் கூடாது. ஐயனார் கோவில்கள் இன்றும் பல கிராமங்களில் உள்ளன. பூம்புகாரில் சுப்பிரமணியர் இந்திரன் கோவில்களுடன் இருந்த சாத்தான் கோவிலை புறம்பணையான் வாழ் கோட்டம் என்று இளங்கோவடிகள் குறிப்பிடுவார்.

ஸ்ரீ ஐயப்பனுக்கு ஆரிய தாதா என்றும் ஒரு பெயருண்டு. ஆர்யா என்றால் பூஜிக்கத் தகுந்த என்று பொருள்.

சேக்கிழாரின் பெரியபுரணாத்தில் ஐயனைப் பற்றிய பாடலொன்று உள்ளது. திருச்சிக்கு அருகிலுள்ள திருப்பதட்டூர் என்ற தலத்தில் கோவில் கொண்டுள்ள அரங்கேற்றிய ஐயனார் பிரசித்தமானது.

திருக்கயிலையில் சேரமான் நாயனார் வழங்கிய திருக்கயிலாயத் திருவுலாவை திருப்பிடவூரிலே (திருப்பதட்டூர்) வெளிப்படுத்தியவர் மகா சாஸ்தா என்று அப்பாடல் பகரும். கயிலையில் கேட்ட திருவுலாவை தமிழ்நாட்டுக்குக் கொண்டு வந்தவர் சாஸ்தா என்று நம்பப்படுகிறது.

கந்தபுராணத்தில் பூரணை புட்கலை ஆகிய தேவியரோடு காட்சிதரும் தர்ம சாஸ்தா குறித்த பாடல் ஒன்றுள்ளது.

"பூரணை புட்கலை பூம்புறமேவ

வாரண மூர்பவன் முன்னுற வந்தான்"

என்று சாஸ்தா குறிப்பிடப்படுகிறார்.

## சபரிமலை ஸ்ரீ ஐயப்பன் கோவில் திறக்கப்படும் நாட்கள்

எல்லா மலையாள மாதங்களிலும் 1 முதல் 5 தேதி வரை, ஆவணி திருவோணம், கார்த்திகை 1 முதல் 41 நாள் (மண்டல பூஜை), மார்கழி 25 முதல் 12 நாள் மகர விளக்கு, பங்குனி உத்திரம், சித்திரை விஷு, வைகாசி ஹஸ்தம்.



சபரிமலையில் இரவு நடை சாத்தும்போது பாடும்

## சாஸ்தா அஷ்டகம்

சரணம் ஐயப்பா சாமி சரணம் ஐயப்பா
சரணம் ஐயப்பா சாமி சரணம் ஐயப்பா

ஹரிவ ராஸனம் ஸ்வாமி விச்வ மோஹனம்
ஹரித தீஸ்வரா ராத்ய பாதுகம்
அரிவி மர்தனம் ஸ்வாமி நித்ய நர்த்தனம்
ஹரிஹ ராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே (சரணம்) 1

சரண கீர்த்தனம் ஸ்வாமி சக்தமானஸம்
பரண லோலுபம் ஸ்வாமி நர்த்தனாலயம்
அருண பாஸுரம் ஸ்வாமி பூதநாயகம்
ஹரிஹ ராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே (சரணம்) 2

ப்ரண ஸத்யகா ஸ்வாமி ப்ராணநாயகம்
ப்ரணத கல்பகம் ஸ்வாமி ஸுப்ரபாஞ்சிதம்
ப்ரணவ மந்திரம் ஸ்வாமி கீர்த்தனபரியம்
ஹரிஹ ராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே (சரணம்) 3

துரக வாஹனம் ஸ்வாமி ஸுந்தரானனம்
வரக தாயுதம் ஸ்வாமி தேவவர்ணிதம்

குருக்ரு பாகரம் ஸ்வாமி கீர்த்தனப்ரியம்
ஹரிஹ ராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே (சரணம்) 4

த்ரிபுவ னார்ச்சிதம் ஸ்வாமி தேவதாத்மகம்
த்ரிநயன ப்ரபும் ஸ்வாமி திவ்யதேசிகம்
த்ரிதச பூஜிதம் ஸ்வாமி சிந்திதப்பரதம்
ஹரிஹ ராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே (சரணம்) 5

பவபயா பஹம் ஸ்வாமி பாவுகாவுகம்
புவன மோஹனம் ஸ்வாமி பூதிபூஷணம்
தவள வாஹனம் ஸ்வாமி திவ்யவாரணம்
ஹரிஹ ராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே (சரணம்) 6

களம்ருது ஸ்மிதம் ஸ்வாமி ஸுந்தரானனம்
களப கோமளம் ஸ்வாமி காத்ர மோஹனம்
களப கேசரீ ஸ்வாமி வாஜி வாஹனம்
ஹரிஹ ராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே (சரணம்) 7

ச்ரித ஜனப்ரயம் ஸ்வாமி சிந்திதப்பரதம்
ச்ருதி விபூஷணம் ஸ்வாமி ஸாதுஜீவனம்
ச்ருதி மனோஹரம் ஸ்வாமி கீதலாலஸம்
ஹரிஹ ராத்மஜம் ஸ்வாமி தேவமாச்ரயே (சரணம்) 8



## மாலை தரித்துக் கொள்ளும்போது ஜபிக்க வேண்டிய மந்திரம்

ஞான முத்ராம் சாஸ்தருமுத்ராம்
குருமுத்ராம் நமாம்யஹம்
வனமுத்ராம் சுத்தமுத்ராம்
ருத்ரமுத்ராம் நமாம்யஹம்
சாந்த முத்ராம் ஸ்த்ய முத்ராம்
வரதமுத்ராம் நமாம்யஹம்
சபர்யாச்ரமஸத்யனே
முத்ராம் பாதுஸதாபிமே - 1

குருதக்ஷிண யாபூர்வம் தஸ்யானுக்ரஹகாரிணே
சரணாகதமுத்ராக்யம் தவன்முத்ராம் தாரயாம் யஹம்
சின் முத்ராம் கேசரீ முத்ராம் பத்ரமுத்ராம் நமாம்யஹம்
சபர்யாசல முத்ராயை நமஸ்துப்யம் நமோநம

## மாலை கழற்றுவதற்குள்ள மந்திரம்

அபூர்வ சலாரோஹி - திவ்யதர்சன காரண
சாஸ்த்ருமுத்ராத்மகாதேவ - தேஹிமேவரத மோசனம்





அண்ணாமலை பல்கலைக்கழக இணைவேந்தரும்
ஸ்ரீ வடசபரி ஐயப்பன் ஆலய நிர்வாக அறங்காவலர்
குழுத்தலைவருமான டாக்டர் எம்.ஏ.எம் இராமசாமி
அவர்களும் திருமதி சிகப்பி ஆச்சி அவர்களும்

# சபரி மலை செல்வோர் அவசியம் அறிந்துகொள்ள வேண்டியவை

சபரி மலையில் அருள்பாலித்து வரும் ஐயப்பனுக்கு, ஆண்டு தோறும் கார்த்திகை முதல் தேதி தொடங்கி மகர விளக்கு முடிந்து நடைசாத்தும் வரை தினமும் காலையில் நெய் அபிஷேகம் நடைபெற்று வருவதை ஐயப்ப பக்தர்கள் அனைவரும் அறிவர். இருப்பினும் கீழ்க்கண்ட நாள்களில் ஐயப்பனுக்கு நெய் அபிஷேகம் குறுகிய கால அவகாசத்தில்மட்டுமே நடைபெறும்.

1. கொடியேற்றும் நாள்
2. உற்சவத்தின் தொடக்க நாள் முதல் ஏழாம் நாள் வரை.
3. பள்ளிக்கட்டு, ஆராட்டு தினங்கள் ஒவ்வோர் ஆண்டும், பக்தர்களுக்குத் திருவாங்கூர் தேவஸ்தானத்தால் முன்கூட்டியே அறிவிக்கப்படு கின்றன.
4. ஆராட்டுத் தினத்தன்று சபரிமலையில் நடை சாத்தப்பட்டு, சுவாமி பம்பைக்கரைக்கு வந்து விடுவதால் அன்று நெய் அபிஷேகம், தரிசனம் ஆகியவை தாமதப்படும்.

5. ஒவ்வோராண்டும் டிசம்பர் 5 மற்றும் 6 ஆம் தேதிகளில், பாதுகாப்பு காரணங்களுக்காக ஸ்ரீ ஐயப்பனுக்கு நெய் அபிஷேகம் தவிர்க்கப்படு கிறது.

6. முன்கூட்டியே பயண ஏற்பாடுகளைச் செய்து கொண்டு சபரிமலை செல்வோர் மேற்கண்ட நாள்களை நினைவில் கொண்டு அதற்கு ஏற்றவாறு தங்கள் பயணத்தைத் தீர்மானித்துக்கொள்ள வேண்டும்.

7. ஜனவரி 18ஆம் தேதியுடன் ஐயப்பனுக்கு நெய் அபிஷேகம் நிறைவுபெறும்.

8. ஜனவரி 19ஆம் தேதி அன்று மாளிகைபுரத்தில் குருதி பூஜை நடைபெறும்.

9. ஜனவரி 20ஆம் தேதி காலை சபரி மலையில் ஸ்ரீ ஐயப்பனைப் பந்தள ராஜா மட்டுமே தரிசனம் செய்துவிட்டு, நடையைச் சாத்தி, பூட்டி சாவியைத் தந்திரியிடம் ஒப்படைத்துவிட்டுச் செல்வார். அன்றைய தினம், ஐயப்பன் கோயிலில் பணிபுரியும் சிப்பந்திகள் உட்பட மற்றவர் யாரும் ஐயப்பனைத் தரிசிக்க இயலாது.



# ஸ்ரீ ஐயப்பன் போற்றி மலர்

ஓம் சுவாமியே சரணம் ஐயப்பா!
ஓம் கன்னிமூல மஹா கணபதியே போற்றி!!

1. ஓம் அரிஹரசுதனே போற்றி
2. ஓம் அச்சன் கோவில் நாயகனே போற்றி
3. ஓம் அகிலலோக நாயகனே போற்றி
4. ஓம் அனாத ரட்சகனே போற்றி
5. ஓம் அன்பர்கள் நேயனே போற்றி
6. ஓம் அன்னதானப் பிரபுவே போற்றி
7. ஓம் அருட்பெருஞ்சோதி ஆண்டவனே போற்றி
8. ஓம் அழுதா மலையில் ஆனந்தத் தாண்டவனே போற்றி
9. ஓம் ஆறுமுகன் தம்பியே போற்றி
10. ஓம் ஆரியங்காவு அய்யனே போற்றி
11. ஓம் ஆளி வாகனனே போற்றி
12. ஓம் ஆரண்ய வாசனே போற்றி
13. ஓம் ஆபரண அலங்காரப் பிரியனே போற்றி
14. ஓம் ஆனந்த வாருதியே போற்றி
15. ஓம் இன்னல்களைக் களைவோனே போற்றி
16. ஓம் இகபரசுகம் அளிப்பவனே போற்றி
17. ஓம் இருமுடிப் பிரியனே போற்றி
18. ஓம் ஈஸ்வரன் புதல்வனே போற்றி
19. ஓம் உலக நாயகனே போற்றி
20. ஓம் ஊக்கம் அளிப்பவனே போற்றி
21. ஓம் ஊழ்வினை தீர்ப்பவனே போற்றி
22. ஓம் ஊமைக்கு அருள்செய்தவனே போற்றி
23. ஓம் எரிமேலி சாஸ்தாவே போற்றி
24. ஓம் எங்கள் குல தெய்வமே போற்றி

25. ஓம் எங்கள் குறை தீர்ப்பவனே போற்றி
26. ஓம் எளியவர்க்கு அனுகூலனே போற்றி
27. ஓம் ஏழைபங் காளனே போற்றி
28. ஓம் ஐங்கரன் தம்பியே போற்றி
29. ஓம் ஐந்துமலைக்கு அதிபதியே போற்றி
30. ஓம் ஐயப்பன் மார்தொழும் ஆனந்த மூர்த்தியே போற்றி
31. ஓம் ஒப்பற்ற தீரனே போற்றி
32. ஓம் ஓவியப் பிறப்பே போற்றி
33. ஓம் ஓங்காரப் பொருளே போற்றி
34. ஓம் ஔதாரிய வீரனே போற்றி
35. ஓம் கற்பூர ஜோதியே போற்றி
36. ஓம் கரிமலை நாதனே போற்றி
37. ஓம் கலியுக வரதனே போற்றி
38. ஓம் கருணா நிதியே போற்றி
39. ஓம் கருமவினையை அகற்றுபவனே போற்றி
40. ஓம் கண்கண்ட தெய்வமே போற்றி
41. ஓம் கன்னிமார் தொழும் கனிவான ஜோதியே போற்றி
42. ஓம் காளைகட்டி ஐயனே போற்றி
43. ஓம் காந்தமலை ஜோதியே போற்றி
44. ஓம் கிருபா சமுத்திரமே போற்றி
45. ஓம் குளத்துப்புழை பாலகனே போற்றி
46. ஓம் சத்குரு சம்ஹாரனே போற்றி
47. ஓம் சத்திய சொரூபனே போற்றி
48. ஓம் சற்குரு நாதனே போற்றி
49. ஓம் சமரச சன்மார்க்கனே போற்றி
50. ஓம் சபரிக்கு மோட்சம் அளித்தவனே போற்றி
51. ஓம் சரண கோஷப் பிரியனே போற்றி
52. ஓம் சாந்த சொரூபனே போற்றி
53. ஓம் சின்முத்திரைக் கையனே போற்றி

54. ஓம் சித்திமுத்தி கொடுப்பவனே போற்றி
55. ஓம் சொரிமுத்து ஐயனே போற்றி
56. ஓம் ஞானவழி காட்டுபவனே போற்றி
57. ஓம் தன்வந்திர மூர்த்தியே போற்றி
58. ஓம் தாரகப் பிரம்மமே போற்றி
59. ஓம் தீன தயாளனே போற்றி
60. ஓம் தீராத வல்வினையைத் தீர்ப்பவனே போற்றி
61. ஓம் துளசி மாலைப் பிரியனே போற்றி
62. ஓம் துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனே போற்றி
63. ஓம் தேவாதி தேவனே போற்றி
64. ஓம் தேவர் துயர் தீர்த்தவனே போற்றி
65. ஓம் நமச்சிவாயப் பொருளே போற்றி
66. ஓம் நாராயண மூர்த்தியே போற்றி
67. ஓம் நீலிமலை நிர்மலனே போற்றி
68. ஓம் நீலஆடை தரிப்பவனே போற்றி
69. ஓம் நெய் அபிஷேகப் பிரியனே போற்றி
70. ஓம் பரசுராமனின் பரந்தாமனே போற்றி
71. ஓம் பம்பையில் பிறந்தவனே போற்றி
72. ஓம் பந்தளத்தின் சிசுவே போற்றி
73. ஓம் பக்தர்களின் பரமானந்தனே போற்றி
74. ஓம் பாவங்களைக் களைவோனே போற்றி
75. ஓம் பாலாபிஷேகப் பிரியனே போற்றி
76. ஓம் பாயசன்னப் பிரியனே போற்றி
77. ஓம் பிள்ளைக்கலி தீர்ப்பவனே போற்றி
78. ஓம் பிருமச்சரிய விரதனே போற்றி
79. ஓம் புஷ்பாலங்காரப் பிரியனே போற்றி
80. ஓம் பூங்காவன பூபாலகனே போற்றி
81. ஓம் பூத நாதனே போற்றி
82. ஓம் பேட்டை நடனப் பிரியனே போற்றி

83. ஓம் பொன்னம்பல வாசனே போற்றி
84. ஓம் மகிஷிசம் ஹாரனே போற்றி
85. ஓம் மணிகண்ட பிரபுவே போற்றி
86. ஓம் மரணபயம் தீர்ப்பவனே போற்றி
87. ஓம் மாதவனின் மைந்தனே போற்றி
88. ஓம் மாளிகைப்புரத்து லோகமாதாவின் மாணிக்கமேபோற்றி
89. ஓம் முக்தர்களின் மோனமே போற்றி
90. ஓம் மோகினி சுதனே போற்றி
91. ஓம் மோகினி ரூபனே போற்றி
92. ஓம் மோட்சம் அளிப்பவனே போற்றி
93. ஓம் வறுமை தவிர்ப்பவனே போற்றி
94. ஓம் வழித்துணை வருபவனே போற்றி
95. ஓம் வாபரின் தோழனே போற்றி
96. ஓம் வில்லாளி வீரனே போற்றி
97. ஓம் விபூதி அபிஷேகப் பிரியனே போற்றி
98. ஓம் வீரமணி கண்டனே போற்றி
99. ஓம் வெம்புலி வாகனனே போற்றி
100. ஓம் வேண்டும்வரம் அளிப்பவனே போற்றி
101. ஓம் வேந்தர்க்கு வேந்தனே போற்றி
102. ஓம் வேட்டுப் பிரியனே போற்றி
103. ஓம் வேத நாயகனே போற்றி
104. ஓம் பதினெட்டாம் படியோனே போற்றி
105. ஓம் சபரிகிரி வாஸனே போற்றி
106. ஓம் ஜோதி சொரூபனே போற்றி
107. ஓம் இராஜா அண்ணாமலைபுரத்து அரசே போற்றி
108. ஆம் நித்ய மங்கள மூர்த்தியே போற்றி

ஓம் ஆயிரம் ஆயிரம் கோடி நாமனே போற்றி போற்றி!



# அருள்மிகு ஐயப்ப கவசம்

## காப்பு

அரிஹர புத்ரனை ஆனந்த ரூபனை
இருமூர்த்தி மைந்தனை, ஆறுமுகன் தம்பியை
சபரி கிரீசனை, சாந்த ஸ்வரூபனை
தினம்தினம் போற்றிப் பணிந்திடு வோமே!
ஐயப்ப தேவன் கவச மிதனை
அனுதினம் சொல்ல அல்லல்கள் ஒழியும்
தினம்தினம் துதிக்கத் தீரும் வினையெலாம்
நாடிய பொருளும் நலமும் வருமே.

## நூல்

1. மண்ணுல கெல்லாம் காத்தருள் செய்ய
மணிகண்ட தேவா வருக வருக
மாயோன் மைந்தா வருக வருக
ஐங்கரன் சோதரா ஐயப்பா வருக!

2. புலிவா கனனே வருக வருக
புவியெலாம் காத்திட வருக வருக
பூரணை நாதனே வருக வருக
புண்ணிய மூர்த்தியே வருக வருக!

3. பூத நாயகா வருக வருக
புஷ்கலை பதியே வருக வருக
பொன்னம் பலத்துறை ஈசா வருக
அடியாரைக் காக்க அன்புடன் வருக!

4. வருக வருக வாசவன் மைந்தா
வருக வருக வீரமணி கண்டா
வஞ்சனை நீக்கிட வருக வருக
வல்வினை போக்கிட வருக வருக!

5. ஐயம் தவிர்த்திட ஐயப்பா வருக
அச்சம் அகற்றிட அன்பனே வருக
இருவினை களைந்தே எனையாட் கொள்ள
இருமூர்த்தி மைந்தா வருக வருக!

6. பதினெண் படியை மனத்தில் நினைக்கப்
பண்ணிய பாவம் பொடிப்பொடி யாகும்
ஐயப்பா சரணம் என்றே கூறிட
ஐம்பூ தங்களும் அடிபணிந்திடுமே!

7. சபரி கிரீசனை நினைத்தே நீறிடத்
துன்பங்கள் எல்லாம் தூள்தூ ளாகும்
சரணம் சரணம் என்றே சொல்லிடச்
சித்திகள் யாவும் வந்தடைந் திடுமே!



29-01-1982 இல் இராஜா அண்ணாமலைபுரம்
ஸ்ரீ ஐயப்பன் ஆலய குடமுழுக்கு விழாவின் போது
அறங்காவலர் குழுத்தலைவர் டாக்டர். எம்.ஏ.எம். இராமசாமி
அவர்கள் இருமுடி தாங்கி படியேறும் காட்சி.

8. பம்பையின் பாலன் பெயர்சொல் லிடவும்
பகைவர்கள் எல்லாம் பணிந்தே வணங்குவர்
ஐயப்பன் பாதம் அனுதினம் நினைக்க
அவனியி லுள்ளோர் அடிபணிந் தேத்துவர்!

9. சரணம் சரணம் சரணம் ஐயப்பா
சரணம் சரணம் சபரி கிரீசா
சரணம் சரணம் சத்குரு நாதா
சரணம் சரணம் ஸ்வாமியே சரணம்!

## வேண்டுதல்

10. சிவனார் மகன்என் சிரசினைக் காக்க
நெடுமால் மைந்தன் நெற்றியைக் காக்க
கஜமுகன் தம்பிஎன் கண்ணினைக் காக்க
நாரணன் பாலன் நாசியைக் காக்க!

11. இருமூர்த்தி மைந்தன்என் இருசெவி காக்க
வாபரின் தோழன் வாயினைக் காக்க
பம்பையின் பாலன் பற்களைக் காக்க
நான்முகப் பூஜ்யன் நாவினைக் காக்க!

12. கலியுக வரதன்என் கழுத்தினைக் காக்க
குமரன் தம்பிஎன் குரல்வளை காக்க
புஷ்களை நாதன் புஜங்களைக் காக்க
முக்கண்ணன் பாலன் முழங்கையைக் காக்க!

13. வீரமணி கண்டன் விரல்களைக் காக்க
மணிகண்ட தேவன் மார்பினைக் காக்க
கயிலை மைந்தன் கைகளைக் காக்க
வன்புலி வாகனன் வயிற்றினைக் காக்க!

14. முழுமுதல் கடவுள்என் முதுகினைக் காக்க
இருமுடிப் பிரியன்என் இடுப்பினைக் காக்க
பிரம்பா யுதன்என் பிட்டங்கள் காக்க
தர்மசாஸ் தாஎன் தொடையினைக் காக்க!

15. முருகன் சோதரன் முழங்கால் காக்க
கற்பூர ஜோதிஎன் கணைக்கால் காக்க
பந்தள பாலன் பாதத்தினைக் காக்க
விஜய குமாரன் விரல்களைக் காக்க!

16. அன்னதானப் பிரபு அங்கமெலாம் காக்க
ஆரியங்கா ஜோதி அன்புடன் காக்க
காட்டாள் ரூபி காலையில் காக்க
நவக்ரஹ நாதன் நடுப்பகல் காக்க!

17. மாலின் மகனார் மாலையில் காக்க
அரிஹர சுதனார் அந்தியில் காக்க
இன்பமய ஜோதி இரவினில் காக்க
எருமேலி சாஸ்தா என்றுமே காக்க!

18. அரியின் மகனார் அனுதினம் காக்க
நடராஜன் பாலன் நாள்தோறும் காக்க
வாசவன் செல்வன் வலப்புறம் காக்க
இருமுடி ஈசன் இடப்புறம் காக்க!

19. காக்கக் காக்கக் கருணையால் காக்க
பார்க்கப் பார்க்களன் பாவம் பொடிபட
இம்மையும் மறுமையும் இல்லா தொழிந்திட
ஈசன் மகன்எனை என்றுமே காக்க!

20. கொடிய விஷங்களும் கொள்ளை நோய்களும்
குருதியைக் குடிக்கும் துஷ்டப் பேய்களும்
காந்த மலைதனைக் கருத்தில் கொண்டிடக்
கலங்கி மறைந்திடக் கருணை புரிவாய்!

21. பில்லி சூனியம் பலவித வஞ்சனை
பம்பையின் பாலன் பெயர்சொல் விடவும்
பஞ்சாய்ப் பறக்க வரமெனக் கருள்வாய்
பயங்களைப் போக்கி அபயம் அளிப்பாய்!

22. வாதம், பித்தம், சிலேட்டுமத் துடனே
வாந்தியும், பேதியும், வலிப்பும் சுளுக்கும்
எவ்வித நோயும் எனையணு காமல்
என்றுமே காப்பாய் எருமேலி தேவா!

23. கல்வியும், செல்வமும், கள்ளமில்லா மனமும்
நல்லோர் உறவும் நாளும் அருள்வாய்
நல்ல மனத்துடன் உனைநான் துதிக்க
நித்தமும் அருள்வாய் சபரி கிரீசா!

24. காமம், குரோதம், லோபம் மோஹம்
மதமாச் சர்யமெனும் ஐம்பெரும் பேய்கள்
என்றுமே என்னை அணுக விடாமல்
ஐயப்ப தேவா வரமெனக் கருள்வாய்!

25. சூது, பொறாமை பொய்க்கோ பமில்லாமல்
சோரம் லோபம், துன்மார்க்கம் கல்லாமல்
வேத நெறிதனை விலகிநில் லாமல்
வீரமணி கண்டா வரமெனக் கருள்வாய்!

26. மூப்பும், பிணியும், வறுமையும், பசியும்
வந்தெனை வாட்டி வதைசெய் யாமல்
உள்ளன் புடனே உன்திரு நாமம்
அனுதினம் சொல்ல அருள்தரு வாயே!

## நமஸ்காரம்

27. அரிஹர புத்ரா அன்பா நமோ நமோ!
சபரி கிரீசா சாஸ்தா நமோ நமோ!
பதினெண் படிவாழ் பரமா நமோ நமோ!
ஐங்கரன் சோதரா ஐயப்பா நமோ நமோ!

28. பொன்னம் பலத்துறை புண்ணியா நமோ நமோ!
புலிப்பால் ஈந்த புண்ணிய நமோ நமோ!
சுரிகா யுதமுடைச் சுந்தரா நமோ நமோ!
மஹிஷி மர்த்தனா மணிகண்டா நமோ நமோ!

29. சரணம் சரணம் சபரி கிரீசா!
சரணம் சரணம் சத்ய ஸ்வரூபா!
சரணம் சரணம் சர்வ தயாளா
சரணம் சரணம் ஸ்வாமியே சரணம்!

(பிரம்மாண்ட புராணத்தில் கேரளீய மஹாத்மியத்தில் ஸ்ரீ பரசுராமரால் துதிக்கப்பட்ட ஐயப்ப கவசம் இது.)



# ஸ்ரீ தர்ம சாஸ்தா பஞ்சரத்தினம்

1. லோக வீரம் மஹா பூஜ்யம் ஸர்வ ரக்ஷா கரம் விபும்
பார்வதீ ஹ்ருதயானந்தம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்
ஸ்ரீ ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

பொருள் : அதிக வீரம் படைத்தவனே, மிகவும் ஆராதனைக்கு உகந்தவனே, எல்லாவற்றையும் காப்பவனே, பரம்பொருளே, பார்வதி தேவிக்கு சந்தோஷம் அளிப்பவனே, சாஸ்தா பகவானே, உன்னை நான் வணங்குகிறேன்.

2. விப்ர பூஜ்யம் விச்வ வந்த்யம் விஷ்ணு சம்போப்ரியம் ஸுதம்
க்ஷிப்ர ப்ரஸாதநிரதம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்
ஸ்ரீ ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

பொருள் : ஞானிகளால் பூஜிக்கப்படுபவனே, எல்லோராலும் ஆராதிக்கப்படுபவனே, பகவான் விஷ்ணுவுடையவும், மகேச்வரன் சிவபிரானுடையவும், அன்புப் புதல்வனே, பக்தர்களுக்குச் சீக்கிரம் வரம் அளிப்பவனே, நான் உன் முன் கரம் கூப்புகிறேன்.

3. மத்த மாதங்க கமனம் காருண்யாம்ருத பூரிதம்
ஸர்வ விக்ன ஹரம் தேவம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்
ஸ்ரீ ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

பொருள் : மிக சக்தி வாய்ந்த யானையின் அழகிய தந்தங்களை

உடையவனே, கருணையெனும் அமிர்தம் நிறைந் தவனே, பக்தர்களுடைய எல்லா வினைகளையும் தீர்த்தருளுபவனே, உன் முன் நான் நமஸ்காரம் செய்கிறேன்.

4. அஸ்மத் குலேச்வரம் தேவம் அஸ்மத் சத்ரு வினாசனம்!
அஸ்மதிஷ்ட ப்ரதாதாரம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்
ஸ்ரீ ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

பொருள் : சாஸ்தாவே, எங்கள் குலத்தைக் காப்பவனே, எங்கள் எதிரிகளை இல்லாதாக்குபவனே, எங்கள் விருப்பங்களை நிறைவேற்றித் தருபவனே, நான் உங்களுக்குத் தலை வணங்குகிறனே்.

5. பாண்ட்யேச வம்ச திலகம் கேரேள கேளி விக்ரஹம்
ஆர்த்தத் ராண பரம் தேவம் சாஸ்தாரம் ப்ரணமாம் யஹம்
ஸ்ரீ ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

பொருள் : பாண்டிய குலத்திலகமாகிய அரிய மாணிக்கமே, கேரளத்தில் விளையாடுபவனே, மிகவும் துன்பமுற்றவர்களைக் காப்பவனே, உன்னை வணங்குகிறேன்.

6. யஸ்ய தந்வந்தரீ மாதா பிதா ருத்ரோ பிஷக்தம்!
தம் சாஸ்தாரம் மஹா வைத்தியம் தயாநிதம்!
ஸ்ரீ ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

பொருள் : தாயாகவும் தந்தையாகவும் வைத்தியனாகவும்

கோபத்தை அடக்கி ஆளும் சக்தியும், யோக சாந்தியும் தம்முள் கொண்ட மகா வீரனே, உனக்கு எனது வணக்கம். நீ எனக்குக் கருணையும் அருளும் அருள்வாய் ஐயப்பா!

7. பஞ்ச ரத்னாகிம்யம் ஏதத்யோ நித்ய சுத்தப் படேன் நரஹ
 தஸ்ய பிரசன்னோ பகவான் சாஸ்தா வஸதிமானஸே
 ஸ்ரீ ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

பொருள் : இந்தப் பஞ்சரத்தினம் எனப்படும் இரத்தினங்களை எவரெல்லாம் தினந்தோறும் பாராயணம் செய்கின்றனரோ, சாஸ்தா மிகவும் மகிழ்ச்சியடைந்து, அவர்கள் மனத்தில் எப்பொழுதும் வசிக்கின்றார்.

8. பூதநாத ஸதா நந்தா சர்வபூத தயாபரா
 ரஷ ரஷ மஹா பாபோ
 சாஸ்த்ரே துப்யம் நமோநமஹ
 ஸ்ரீ ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

பொருள் : எல்லா மனிதர்களுக்கும் அருள் பாலிப்பவனே, என் உயிர் நாதம் உன்னால் ஆனந்தப்படுகிறது. மஹா வீரனே! சாஸ்தாவே! எவ்வுயிரையும் காப்பவனே! உன் நாமம் போற்றி போற்றி.



